# இலக்கியக் கட்டுரைகள்

M. ரம்போலா மாஸ்கரேனாஸ் M. A.

தமிழ்ப் பேராசிரியர்

அர்ச். சூசையப்பர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.

ஒற்றுமை நிலையம்,

8, வியாசராவ் தெரு,

தியாகராயநகர், மதராஸ்-17.

[பதிப்புரிமை பெற்றது] 1959 [விலை ரூ. 1

# முன்னுரை

இலக்கியப் பத்திரிகைகளுக்கும் சமயப் பத்திரிகைகளுக்கும் அவற்றின் சிறப்பு மலர்களுக்கும் நான் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளே இலக்கியக் கட்டுரைகள் என்ற பெயரில் உருப்பெற்று நூல் வடிவில் வெளிவருகின்றன. எனவே, இவை ஒரே தொகையாகவோ ஒரே வகையாகவோ இருத்தற்குரியன அல்ல. இவற்றில் இலக்கிய சம்பவ விளக்கங்கள் இருக்கின்றன. கவிதைக் கருத்துக்களின் விளக்கங்கள் காணப்படுகின்றன. திருக்குறள் உடைமைகளில் ஒருசில உடைமைகள் ஆராயப் பெறுகின்றன. சில திருக்கக் கட்டுரைகளும் சேர்ந்துள்ளன. கிறிஸ்தவக் கவிஞர்களில் இலக்கிய சேவைகளைப் புலப்படுத்தும் கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. ஒரு கட்டுரை வள்ளுவரையும் ஏலேல சிங்கரையும் உரையாட வைக்கின்றது.

இலக்கியத்தின் நோக்கம் உயர்ந்த சிந்தனைகளை நம் உள்ளத்தில் கோயில் கொள்ளச்செய்வது என்று அறிந்தோர் கூறுவர்.

அறிவின் சிகரத்திலிருந்து பேசும் சான்றோர்களின் பேச்சு நமது எண்ணத்திற்கு எழுச்சியும் இதயத்திற்கு உணர்ச்சியும் தருகின்ற இனிய பேச்சாகும். அத்தகைய பேச்சு வரிசையை இந்த நூலில் தொடங்கிவைப்பவர் நம் அருமைத் தமிழ்க்கிழவி ஔவைப்பிராட்டியார் ஆவர். ஔவைப்பிராட்டியாரும் அவரனைய பெரியார்களும் மக்கள் வாழ்க்கையைப்பற்றிச் சொல்லிய மாண்புறு கருத்துக்களை வாசகர்களோடு சேர்ந்து ஆயும் நற்பணியையே நான் இந்தக் கட்டுரைகளில் மேற்கொண்டுள்ளேன்.

இந்தக் கட்டுரைகளை நல்லமுறையில் வெளியிட்டுள்ள தூத்துக்குடித் தமிழ் இலக்கியக் கழகத்தாருக்கு நன்றியுடையேன். இவைகளுள் பெரும்பாலனவை சேசுசபை சங். பிரான்சிஸ் முருயிஸ் சுவாமிகளை ஆசிரியராகக் கொண்டு நிலவிய "தாய் நாடு" என்னும் சஞ்சிகையில் வெளிவந்தவை. எழுத்துத் துறையில் எனக்கு வழிகாட்டி என்னை ஊக்கிய முருயிஸ் அடிகளார்க்கு எனது மனமார்ந்த நன்றியறிதலை இதன் மூலம் புலப்படுத்திக்கொள்கிறேன்.

14—4—58
திருச்சிராப்பள்ளி. **ரம்போலா மாஸ்கரேனஸ்**

# உள்ளீடு

# இனிய பேச்சு

மனிதன் பேசும் பிராணி. மனுஷியுங் கூடத்தான். பேசா மனிதனும் பேசா மடந்தையும் அப்பிராணிகளே. மனிதன் பேசவேண்டுமா? சிந்தித்து விடை காண வேண்டிய கேள்விதான் மனிதன் மனிதனாக வாழவேண்டுமானால் அவன் பேசித்தான் ஆகவேண்டும். எப்படி? தனக்குள்ளேயல்ல, தன்னோடு அல்ல; மரம் மட்டைகளோடு அல்ல; கன்று காலிகளோடும் அல்ல; தன் இனத்தவரான பிறமக்களோடுதான். மூச்சில்லாமல் வாழ்வில்லை. மற்ற மக்கள் மனிதரோடு பேச்சில்லாமல் குடும்பமில்லை, கூட்டுறவு இல்லை, சமூகம் இல்லை, உலகியல் இல்லை.

அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டார்கள். பின்னர் "மௌனம் கலக நாஸ்தி" என்று தத்துவம் பேசுகின்றனர்கள். இவர்கள் வாயிருந்தும் ஊமையராய் வாழ்கின்றவர்கள். பேச்சு பிறந்தால் கலகம் பிறக்கலாம், பிறக்கட்டுமே. கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும் அல்லவா? முழக்குண்டு, அமைதியுமுண்டு இதற்கெல்லாம் பயப்பட்டால் முடியுமா? மௌனம் கோழைகளின் கேடயம். பயங்காளிகளின் பதுங்குமிடம். முறைகெட்ட மௌன முக்காடு இடுகாட்டு அமைதியைக் கொடுக்கலாம். மனிதத் தன்மையைப் புலப்படுத்தாது.

குழந்தை எப்போது பேசும் என்று எவ்வளவு ஆவலுடன் பெற்றோர்களும் பெரியவர்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்கள். அதன் மழலையாட்டத்தில் எப்படி மயங்கிப் போகிறார்கள்! சிசுக்களின் 'செவ்வாய்க் குதலை மெய்பெறு மழலை' குழலையும் யாழையும்விட இனிமை நல்குவது. காதலியின் கனிவாய் அமுதப் பேச்சுக்குக் காதலன் நின்று தவம் செய்கிறான். அப்பக்கத்திலும் அப்படித்தான். எப்போ வருவாரோ என்ற ஏக்கம் மட்டுந்தானா அவளுக்கு? எப்போ பேசுவார் என்ற வேட்கையும் உண்டல்லவா? மன மொத்த நண்பர்களோடு அளவளாவுதலைக் காட்டிலும் மகிழ்ச்சி தருவது வேறென்ன?

கோவையாகவும் இனிமையாகவும் பேசுகின்ற பெரு நாவலர் எங்கே இருக்கின்றார்கள்? அங்கே அவர்களைச் சுற்றி மக்கள் திரண்டு கூடுவது அதிசயமில்லை. தொண்டர் கூட்டம் அந்த வித்தகரின் தேனூறும் சொற்களுக்கு வாயூறி நிற்பதில் வியப்பில்லை. சொல்லின் வேந்தன் ஆணையிடுவது என்ன என்று ஆர்வத்துடன் கேட்கிறார்கள் அவையோர். அவர் விளம்பிய வகை விரைந்து செயலாற்ற முனைந்தே வருகின்றார்கள். "விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப்பெறின்."

பேசும் பிராணி பேசாப் பிராணியாகலாம். அதனால் அப் பிராணிப் பட்டமும் பெற்றுக் கொள்ளலாம். பாதகமில்லை. அவன் சீறும் பிராணியாக மாறிவிடல் ஆகாது. உறுமும் பிராணியாக உருவெடுத்துவிடக் கூடாது. பேசுந் தலைவர்களிடத்தில் சிலருக்கு அபாரப்பற்று. இன்னுஞ் சிலருக்கு ஆத்திரப் பகைப் பொங்கல். இதனால் அத்தலைவர்கள் பேசுவது முறையே கர்ஜனையாகும், உறுமுதல் ஆகும். தலைவர்கள் பேசித்தான் இருப்பார்கள். பத்திரிகைகள் கர்ஜித்ததாகவோ உறுமியதாகவோ கொட்டை எழுத்துக்களில் புரட்டித்திட்டும். மனிதர்களில் மாணிக்கம் எனத் தகும் மாபெருந் தலைவர்களை கர்ஜிக்க வைக்கின்றோமே, உறுமச் செய்கின்றோமே என்ற கவலை ஒரு சிறிதும் இருப்பதாகத் தெரியவில்லை.

மேட்டுப் பேச்சானாலும் வீட்டுப் பேச்சானாலும் இனிய பேச்சே பேச்செனப்படும். வெல்லும் சொல்லும் உண்டு. கொல்லும் சொல்லும் உண்டு. வில்லம்பைவிடச் சொல்லம்பு பொல்லாதது. தீயினால் சுட்டபுண் ஆறும். நாவினால் சுட்டவடு ஆறாது. இன்சொலால் அன்றி உலகம் வன்சொலால் மகிழாது. கனியிருக்கக் காயைத் தேடலாமா? கரும்பிருக்க இரும்பைக் கடிக்கலாமா? இனிய சொல் இருக்க இன்னாச்சொல் சொல்வது தகுமா?

இனிய பேச்சு உதட்டில் தவழும் எழிற் பேச்சல்ல. உள்ளத்தில் உறைத்தெழும் அன்புப் பேச்சு. மேடைப் பேச்சு, பழக்கத்தால் மெருகு பெறலாம். இனிய பேச்சு நல்ல குடிப்பிறப்போடு உதிப்பது. உயர்ந்த பண்பாட்டால் உரம் பெறுவது. இனிய பேச்சுக்கு ஈரம் வேண்டும், வீர

மும் வேண்டும். வஞ்சகமில்லாத அறவாழ்வு வாழ்வோர் வீரமும் ஈரமும் பொருந்தப் பெற்ற புண்ணிய சீலர், இனிய வையே பேசும் இயல்பினர். சத்தியம் இல்லாத சடங்கு பொய். வாழ்க்கையில்லாத வழிபாடு பொய். அறத்தின் அன்பின் அடிப்படையில் எழாத இன்சொல் பொய்.

இல்லையென்று சொல்வதும் இன்சொல்லே. பின்னே பார்க்கலாம் நாளைக்கு ஆலோசிக்கலாம் என்று இழுத்து இழுத்து நெளித்து வளைத்துக் குதப்புவதை, இயலாத நிலையில் இல்லை என்று எதார்த்தமாய்ச் சொல்லிவிடுவதே இனிமையானது.

ஔவைப் பிராட்டிக்கு ஓர் ஆடு வேண்டியிருந்தது. அவள் வாதவன், வத்தவன், யாதவன் என்ற சீமான்களிடத்துச் சென்று கேட்டாள். அவர்களுள் வாதவன் "பிறகு தருகிறேன்" என்றான். பக்குவமாய்ப் பதில் சொல்லியதாகக் கருதிக் கொண்டான். வத்தவன் "இன்றுபோய் நாளை வருக" என்றான். இங்கிதமாய்ப் பேசி அனுப்பியதாக அவனுக்கு எண்ணம். யாதவன் கறந்தபால் கறந்தபடி பேசும் களங்கமற்ற இயல்பினன். வஞ்சமில்லாத நெஞ்சினன். அவன் "என்னிடம் இல்லை, மன்னிக்க வேண்டும்" என்று திர்க்கமாய்ச் சொன்னான். இச்செய்தியை நமது மூதாட்டி பாட்டாக இசைத்தாள். பதம்பிரித்துப் பொருள்கூற வேண்டியதில்லை. அந்த அளவுக்கு அது வெள்ளையாக அமைந்திருக்கின்றது அந்த அம்மையாரின் திருவுள்ளம் போல.

"வாதவர்கோன் பின்னையென்றான் வத்தவர்கோன் [நாளையென்றான்
யாதவர்கோன் யாதொன்றும் இல்லையென்றான்—ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும் வத்தவர்கோன் நாளையினும்
யாதவர் கோன் சொல்லே இனிது."



# மனிதன்

உணவுப் பஞ்சம், உடைப் பஞ்சம், இடப் பஞ்சம் இன்னும் பல பொருட் பஞ்சம் முதலிய பல்வகைப் பஞ்சங்களைப்பார்த்தும் கேட்டுமிருக்கின்றோம். கிரேக்க நாட்டில் ஒரு காலத்தில் மனிதப்பஞ்சம் இருந்ததாகத் தெரிகின்றது. அங்கே தெயோஜெனிஸ் என்ற அறிஞன் இருந்தான். அவன் வெடுக்கான தத்துவஞானி பட்டப் பகல் வெட்ட வெளிச்சத்தில் வீதியிலே விளக்கை எடுத்துச் செல்வான். அடுத்து எதிர்ப்படும் ஆட்கள் முன்பு அதனைக் காட்டி அவரை உறுத்துப் பார்ப்பான். "ஏனையா இந்தக் கோலம்?" என்று மனிதர்கள் கேட்பார்கள். "ஐயன்மீர்! நான் மனிதனைத் தேடுகின்றேன். அகப்படவில்லை" என்பான்.

காலையில் கண்ட மனிதனை மாலையில் காணமுடியவில்லை. பகலில் கண்ட மனிதனை இரவில் காண முடியவில்லை. ஒளியில் கண்ட மனிதனை இருளில் காண முடியவில்லை. வாழ்வில் கண்ட மனிதனைத் தாழ்வில் காண முடியவில்லை. இன்பத்தில் கண்ட மனிதனைத் துன்பத்தில் காண முடியவில்லை. சிரிப்பில் கண்ட மனிதனைச் சினத்தில் காண முடியவில்லை. நாட்டில் கண்ட மனிதனை வீட்டில் காண முடியவில்லை. போதனையில் கண்ட மனிதனை சாதனையில் காண முடியவில்லை. சில பல சாதனையில் கண்ட மனிதனை ஏதோ ஒரு சோதனையில் காண முடியவில்லை. வெற்றியில் கண்ட மனிதனைத் தோல்வியில் காண முடியவில்லை. நண்பர்கள் குழுவில் கண்ட மனிதனைப் பகைவர் கூட்டத்தில் காண முடியவில்லை. ஊர்க்களத்தில் கண்ட மனிதனைப் போர்க்களத்தில் காண முடியவில்லை. ஆகவே எக்காலத்தும் எவ்விடத்தும் எக்கூட்டத்தும் மனிதராக இருப்பவர்கள் தேடித் தெரிந்துகொள்ளுதற்குரியவர்தாம்.

சில விளக்குகளையே விளக்கு வைத்துப் பார்க்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும். அந்த வகையிலே தான் தெயோஜெனிஸ் மனிதனை விளக்கு வைத்துத் தேடியதாகக் கொள்ளவேண்டும். விளக்கு தனக்கு இயல்பான

ஒளியுடன் விளங்கினால் அதனை வேறொரு விளக்கு வைத்துப் பார்க்கவேண்டிய தேவை இருக்குமா? மனிதனும் தனக்கு இயல்பான மன் + இதனாக, நிலைபெற்ற + நன்மையாளனாக இருந்தால் அவனைக் கண்டுகொள்ள விளக்கொளி கொண்டு அலைவுற்றுத் திரியவேண்டிய அவசியமில்லை.

"எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" என்று உளக்காட்சித் திறம்பெற்ற உத்தமப் புலவர் தாயுமானவர் உணர்ந்து காட்டுகின்றார். மனிதன் தன் பெருமையை உள்ளவாறு உணர்தல் வேண்டும். மனிதனாகப் பிறப்பது அருமை உடையது. மனிதனாகச் சிறப்பது அதைவிட அருமை உடையது. "அரியது கேட்பின் வரிவடி வேலோய்! அரிதரிது மானிடர் ஆதல் அரிது" என்ற ஒளவைக் கிழவியின் அமுத வாசகத்தில் "மானிடராதல்" என்ற தொடரில் மனிதனின் பெருமையும், பொறுப்பும் கலந்து மிளிர்தல் காண்க. இந்தப் பெருமையையும் பொறுப்பையுமே ஆன்றோர்களின் அனுபவ உரைகளனைத்தும் நமக்கு அறிவுறுத்துகின்றன.

ஓரறிவு உயிர் முதலாக ஐயறிவு உயிர் ஈறாகப் பல்வேறு உயிர்களுக்கில்லாத மன அறிவை, அதனாலாகும் பகுத்தறிவை, நலன் தீமை அறியும் நல்லறிவை மனிதன் பெற்றிருக்கின்றான். இந்த மன அறிவன்றோ மனிதனை மனிதனாக்குதல் வேண்டும்? மாணிக்க வாசகரைப்போல் "நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்?" என்று கேட்டறிந்து செயலாற்றும் தன்மை படைத்த மனிதன் தனிப்பெரும் மாண்புடையவன். இந்த அடிப்படையான ஆய்வும் அந்த ஆய்வில் விளையும் ஆக்கமும், மிக மிக முக்கியமானவை. அக அறிவு சுருங்கிப் புற அறிவு எத்துணை பெருகினும் என்ன பயன்? அக அறிவின் வளர்ச்சியோடு வளரும் புற அறிவு ஆக்கந் தருகின்றது. அக அறிவு குன்றிப் புற அறிவு பெருகினால் அது அணுகுண்டைத் தருகின்றது.

எத்தனை விதங்கள்தான் கற்கினுங் கேட்கினும் மனிதன் தன்னை உணரவில்லை என்றால் தரணியை உணரான். தரணியின் தலைவனையும் உணரான். தன்னை உணர்பவனே தரணியை உணர்பவன். உலகெலாம் உணர்ந்து ஓதற்கு

ஒரு பெரும் முதல்வனை உணர்பவன். மனித வாழ்வில் அடையத்தகும் பெருமைகள் வெற்றிகள் மேன்மைகள் யாவற்றையும் பழுதற அடைபவன்.

*'என்ன வரங்கள் பெருமைகள் வெற்றிகள்*
*எத்தனை மேன்மைகளோ*
*தன்னை வென்றாலவை யாவும் பெறுவது*
*சாத்திய மாகுமென்றே*
*முன்னை உரைத்த மறைப்பொருள் தன்னை*
*முற்றுமுணர்ந்த பின்னும்*
*தன்னை வென்றாளும் திறமை பெறாதிங்கு*
*தாழ்வுற்று நிற்போமோ'*

என்று சித்தர்கள் கூட்டத்தோடு சேர்ந்து பாடும் தத்துவம் பெறுபவன்.

மனிதன் தன்னுடன் பிறந்த பெருமையையும் அதனின்று பிறக்கும் உரிமையையும் அதனைப் பேணிக் காக்கும் கடமையையும் மறந்தால் விவேகானந்தனாக வாழவேண்டிய அவனே வேடிக்கை மனிதனாகத் திரிந்தலைவான். பாரதியார் கூறுவது போல அவன் 'தேடிச் சோறு நிதம் தின்பான். பல சின்னஞ்சிறு கதைகள் சொல்வான். மனம் வாடி மிகத் துன்பம் உழல்வான். பிறர் வாடப் பல செயல்கள் செய்வான். நரைகூடிக் கிழப்பருவம் எய்திக் கூற்றுக் கிரையெனப் பின் மாய்வான்.'

மனிதன் வெறும் வயிற்று மனிதனாக மட்டும் வாழ்ந்து திருப்தி அடைவதற்கில்லை. எல்லாம் யோசிக்கும் வேளையில் பசித்திர உண்பதுவும், உறங்குவதுமாக முடிந்துவிடுவதற்கில்லை. நெறியான உலக இன்பங்களைத் துய்ப்பதிலும் நிறைவு காண்பதற்கில்லை. மனிதன் வெறுஞ் செயல்களால் வீழப் பிறந்தவன் அல்லன். அருஞ் செயல்களால் என்றும் வாழப் பிறந்தவன். மன்று உலகத்து மன்னுதல் குறித்தவன்.

இடத்திற்கும் சந்தர்ப்பத்திற்கும் இசைந்தவண்ணம் இயல்பு மாறுபவன், எடுப்பார் கைப் பிள்ளையாகவே என்றும் இருப்பவன், களிமண் மனிதன். ஒரு சிறிது துன்பத்திலும் உருக்குலைந்து போகின்றவன், மெழுகு மனிதன்.

தொட்டாலும் குற்றம், பட்டாலும் குற்றம் என்று பிறரோடு ஒட்டாமல் வாழ்பவன் மலர் மனிதன். தோத்திரத்தில் மயங்காதவன், அர்த்தமற்ற ஆர்ப்பாட்டத்தில், ஆரவாரத்தில் அசையாதவன் கல் மனிதன். நெஞ்சில் உரமும் நேர்மைத் திறனுங் கொண்டு பிறரால் செய்தற்கரியவை செய்து முடிப்பவன் இரும்பு மனிதன். சுடச்சுட ஒளிவரும் பொன்போலத் துன்பத்திலும், வறுமையிலும், பிற பிற கஷ்ட நஷ்டங்களிலும் கலக்கமின்றி இன்முகங்கொண்டு புன்முறுவலோடு வாழத் தெரிந்தவன் தங்க மனிதன்.

# பெண்

**நா**டாக இருக்கலாம். அல்லது காடாக இருக்கலாம். மேடாக இருக்கலாம். அல்லது பள்ளமாக இருக்கலாம். நாட்டின் நல்லியல்பு நாட்டையும் காட்டையும் மேட்டையும் பள்ளத்தையும் பொறுத்ததல்ல. நல்ல ஆடவர் எங்குளர்? அங்கேயே நல்ல நாடு அமைகின்றது. இவ்வாறு பேசுகின்றார் ஒளவையார்.

இந்த ஒளவையார் என்று தமிழ் நாட்டுக் குழந்தைகளும் அறிந்திருக்க வேண்டும். அவள் அறிவு செழித்த அற்புதப் பெண்மணி. அவள் பெண்மணி, எனவேதான் ஆடவரைப்பற்றி இவ்வளவு பெருமையாய் அறைந்தாள் என்று எண்ணுதல் பொருந்தாது. அங்ஙனமாயின் "பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்று வள்ளுவர் கடாவியதும் அவர் ஆண்மணி—அல்ல, அல்ல, ஆண்—என்பதனால்தான் என்று சொல்ல நேரும் அல்லவா?

ஆடவர் மகளிர் என்ற பால் பிரிவைப் பாருங்கள். ஆண்கள் ஆண்கள்தாம். பெண்களோ பெண்மணிகள். "வள்ளுவர் விழாவிற்குப் பதினாயிரக்கணக்கான ஆண்களும் நூற்றுக்கணக்கான பெண்மணிகளும் வந்திருந்

தனர்" என்போம். பதிஞயிரக்கணக்கான ஆண்கள் கோடிக்கணக்காளுலும் ஆண்களே. நூற்றுக்கணக்கான பெண்மணிகள் பத்துக் கணக்காக ஒற்றைக் கணக்காகக் குறைந்தாலும் பெண்மணிகளே. "மணி" ப்பெருமையை நாம் எப்படியோ அம்மையார்க்கே உரிமையாக்கிவிட்டோம். அவர்களுடைய அந்த அநுபவ பாத்யதை என்றைக்கிருந்து ஏற்பட்டது என்று திட்டவட்டமாகக் கூறுவதற்கில்லை. "சரி நிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே" என்று சமத்துவ முழக்கஞ் செய்த புரட்சிக் கவிஞர்கள் முதல் எந்தப் புரட்சியையும் கனவு கண்டும் அறியாத பாமரர்வரை பெண் என்ருல் ஒரு தனிப்பெருமை அளித்தே வருகின்ருர்கள்.

பெண் என்ருல் பேயும் இரங்கும் என்பது பழமொழி. பேய் இரங்குகின்றதோ? இரங்கவில்லையோ? அந்தக் காட்சி காணக்கிடையாத கருவூலக் காட்சி. ஆனல் நாம் பயணம் செய்யும்போது கண்ணுரக் காண்கிருேம். குறிப்பாக பஸ் போக்குவரவில் பெண் என்ருல் கண்டக்டர்கள் இரங்குகிருர்கள். கண்டக்டர் 'மணி' களைப்பற்றி இப்போ நமகக்குக் கவலையில்லை 'பயணி'கள் ஆண்கள் இரங்குகிருர்கள். இருந்த இடத்தை விட்டு இறங்கவும் செய்கின்ருர்கள். அம் 'மணி' களுக்கே முதல் இடத்தை இரங்கியும் இறங்கியும் அளிக்கின்ருர்கள்.

பெண் விரும்புதற்குரியவள். ஒரு ஆடவன் தனக்கியைந்த ஒரு பெண்ணை விரும்பித் திருமணம் செய்து குடும்பங் கண்டு வாழ்வது. முறையான பொது நெறி யாழில் தோன்றுவது இசை, கடலில் பிறப்பது முத்து. மலையில் உள்ளது சந்தனம். இசையால் கேட்பவனுக்கன்றி யாழுக்குப் பயனில்லை. முத்தால், ஆரஞ் செய்து அணிபவனுக்கன்றி கடலுக்குப் பயனில்லை. சந்தனத்தால், பூசுபவனுக்கன்றி மலைக்குப் பயனில்லை. இப்படியே பெண்ணுல் பிறந்தகத்திற்கு என்ன பயன்? புகுந்த இல்லத்திலேயே அவள் பொலியும் பயனும் தருகின்ருள். இக்கருத்தை கலித்தொகை சிறந்த திரைக்காட்சியாக அமைத்துக் காட்டுகின்றது.

பெண்ணை மெல்லியல் என்போம். இந்த மெல்லியல்பு ஆடவன் வல்லியல்பாலே பூரணம் பெறுகின்றது. பெண் மென்மையான கொடி. இது வன்மையான கொம்பைச் சுற்றிக் கொள்வது இயல்பே. பெண்ணைக் கொடுக்கின்ற தாகச் சொல்வோம். மரபாக வருகின்ற இந்தத் தொடர்கள் பெண்ணின் நல்லார் மெல்லியல்பை வலியுறுத்துகின்றன. மண்ணில் நல்ல வண்ணம் வாழத் துணை செய்யும் பேரியல்பு அம்மெல்லியலாரது. எனவேதான் இவர் வாழ்க்கைத் துணை எனப் போற்றப் பெறுகிறார்.

பெண்மையின் பெருமையைத் தாய்மையில் காண்போம்.

*"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்*
*நன்கலம் நன்மக்கட் பேறு"*

சங்ககாலப் பெண்மணி இவ்வுண்மையை உணர்ந்து மொழிந்தாள். "ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே" என்று அக்காலத்தில் தாய்மை மணிமுரசு கொட்டியது. பெறுதல் பேணுதல் இவற்றைத் தாய்மையின் தலைக் கடனாகப் பெண்ணுலகம் பேணி வந்தது.

பெண்மையில் பிறப்பது தாய்மை. தாய்மையில் பிறப்பது தியாகம். அன்னையின் தியாகத்திற்கு இணையான தியாகமும் உளதோ? முந்தித் தவங்கிடந்து முந்நூறுநாட் சுமந்து பெறும் தாய்மைத் தொடர்பு முற்றுந் துறந்த தவசிகளையும் வயிறெரியவைப்பது. பட்டினத்தடிகள் தம் தாய் இறந்த போது—ஈமச் சடங்கில்

*முன்னை இட்ட தீ முப்புரத்திலே*
*பின்னை இட்ட தீ தென்னிலங்கையில்*
*அன்னை இட்ட தீ அடிவயிற்றிலே*
*யானும் இட்ட தீ மூள்க மூள்கவே*

என்று எரியாய் எரிந்து பாடிய செய்தி நாம் அறிந்ததே.

வீடு விளங்க, நாடு விளங்க, உலகம் விளங்கப் பெண்மணி விளங்க வேண்டும். தொட்டிலை ஆட்டுங்கை உலகை ஆளுகின்றது. ஆவதும் பெண்ணால் அழிவதும் பெண்ணால் என்பது அன்றுபோல இன்றும் உண்மையான வாசகம். இருண்ட வீட்டில் ஒளி ஏற்றும் சக்தி

பெண். அல்லோலகல்லோலமான உலகத்தைச் சாந்தியின் இருப்பிடமாக அமைக்கும் சக்தி பெண்.

*அல்லும் பகலும் உழைப்பவர் ஆர்?—உள்ளது*
*அன்பு ததும்பி எழுபவர் ஆர்?*
*கல்லும் கனியக் கசிந்துருகித் தெய்வக்*
*கற்பனை வேண்டித் தொழுபவர் ஆர்?*

•••○◯○•••

# மனை விளக்கு

"சுவரும் கூரையுமாயினுஞ் சரி. அன்றி வெட்ட வெளியாயினுஞ் சரி, எங்கே உயர்குண மனைவி இருக்கின்றாளோ அங்கே வீடு அமைகின்றது. அடுப்பும் கூரையும் அவசியமில்லை. மீன்கள் செறிந்த வானமே அவள் தலைக்கு மேலிருந்தாலும் மின்மினிப் பூச்சியே ஒளி தந்து இலங்கினாலும், புல்வெளியே கூடமாய்ப் பொருந்தினாலும் உத்தமி உறைவிடம் எதுவும் வீடே. மாடி வீட்டினும் வர்ணம் பூசிய சுவரினும் சிறக்கச் சீரிய பெண்ணின் நல்லாள் இருக்கும் இடமெல்லாம் அவள் ஒளியும் அமைதியும் காப்பும் தந்து உதவுகின்றாள்."

ஆங்கிலப் பேராசிரியர் ரஸ்கின் இல்லத்தின் மெய்யான இயல்பைப்பற்றித் தரும் எழுத்துச் சித்திரம் அது.

மனையோடு தொடர்பு படுத்திப் பேசப்படுபவள் மனையாளே யன்றிக் கணவனல்ல. மனைவி, மனையாள், மனையாட்டி என்கின்றோம். மனையன் அல்லது மனைவன் மனை மனையான் என்கிறோமில்லை. இல்லாள் என்பது பொருள் சுரக்கும் இன்சொல்; இல்லான் என்று சொல்லிப் பாருங்கள். ஒன்றும் இல்லாதவனைக் குறித்துக் கைவிரித்துக் காட்டும். மனைக்கும் மனைவிக்கும் உள்ள தொடர்பினை நமது வாழ்வியல் நல்லவண்ணம் போற்றி வந்திருக்கின்றது

தென்பதை நமது சொல்லாட்சி நன்கு நிறுவுகின்றது. இல்லத்தின் தலைவன் கணவனே, மெய்தான். அவன் தன் அலுவல் பெரும்பான்மை வீட்டிற்கு வெளியில் இருக்கின்றது. வீட்டை விளக்கும் பெரும் பொறுப்பு மனைவியைச் சார்ந்ததாகின்றது. வீட்டை விளக்கமுறச் செய்பவள், செய்யும் தகுதியும் திறமையும் உடையவள், கடமையும் கரிசனையும் இயல்பாய் அமைந்தவள் அவளே.

வீட்டை விளக்குவது அகல் விளக்கும் அரிக்கன் விளக்குமல்ல. எண்ணெய் விளக்கும் எலக்டிரிக் விளக்குமல்ல. "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு" என்றனர் பொய்யில் புலவர். இம்முறையை யொட்டி மனையாளே மெய்யான மனை விளக்கு என்று அறுதியிட்டுச் சொல்லுதல் தகும்.

"மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவம் செய்திட வேண்டும் அம்மா" என்கின்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை மங்கையராய்ப் பிறப்பதற்கே நல்ல மாதவஞ் செய்ய வேண்டுமானால் பிறந்து குணத்தோடு வளர்ந்து புகுந்த அகத்தில் இல்லறஞ் சிறக்க வாழ்வதற்கு அவர்கள் எவ்வளவு பெருந்தவம் இயற்றியவர் ஆதல் வேண்டும்?

ஒரு மனைக்கு விளக்கு மனைவி. அவள் தன்னை விளக்குகின்றாள். விளக்குகின்றாளேயன்றி மினுக்குவதில்லை. விளக்குதல் உழைப்பின் உறுபயன். மினுக்குதல் சோம்பேறித்தனத்தின் சொகுசான விளைவு. வீட்டைப் பெருக்குதல், நீர் இறைத்து வருதல், பாத்திரந் தேய்த்தல், சமைத்தல், துணி துவைத்தல் முதலிய மெய் வருந்துந் தொழிலால் மகளிர் உடம்பு விளக்கம் உறுகின்றது. சிந்தாமணிச் சேலையால் கிஸ்மத் வளையலால் சந்திரலேகா டோலக்கால் ஜெமினி ஜிமிக்கியால் சோப்பால் ஸ்னோவால் பவுடரால் மட்டும் அழகு பெறலாம் என்பது "மேக் அப்" பெண்டிரின் குறுக்கு வழி அழகாகலாம்; சாஸ்வதமான அழகு அதுவோ? நிலைபெற்ற வனப்பு உழைப்பால், உடல் உறுதியால், சுத்தத்தால் சுகத்தால் பெறப்படுவது. நல்லுடையாலும் அணியாலும் மேலும் நலம் பெறுவது.

நல்ல மனைவி தன் கணவனைக் கண்ணெனப் பேணு கின்றாள். அவள் அன்புடையவள், அறிவுடையவள், சமைக்குந் திறன் தெரிந்தவள். வெளியுலகக் கவலைகளில் உழன்ற கணவன் வீடு திரும்புகையில் அவன் தன் அன் புடைய இல்லாளின் அமைந்த சூழ்நிலையில் ஆறுதல் பெறும் அவாவோடு வருகின்றான், அங்கே அவனுக்கு அறிவின் தோழமை உண்டு. அன்பின் இன்னமுது உண்டு. அறுசுவை நல்லுணவு உண்டு.

நன்கு சமைக்கத் தெரியாத இல்லாள்கள் நிறைந்த பதிகளில் கிளப்புகள், கபேக்கள், ஹோட்டல்கள், ரெஸ்ட ரன்ட்கள் பெருகிய வண்ணமிருத்தல் அதிசயமல்ல.

பகலவன் கதிரொளி பரப்பி இருள் கடிந்து உயிர் வாழ உதவுகின்றான். மனைவியும் அன்பொளி பரப்பி, பகை நீக்கி, கணவன் குழந்தைகள் முதலியவர் நல்வாழ்வு வாழத் துணை செய்கிறாள். வீட்டின் திருவிளக்காகிய தாய்மை வாழ்க!



# பேச்சுக் கலை

எழுத்தறிந்தும் படிப்பறிந்தும் எண்ண அறியாத வரை எண்ணப் பண்ணுவது சொற்பொழிவு. செல்வத்துள் செல்வமாகிய செவிச் செல்வத்தின் ஊற்றாக விளங்குவது சொற்பொழிவு. சோர்ந்திருக்கும் சமூகத்தைத் தட்டி எழுப்புவது சொற்பொழிவு. அயர்ந்து தன் ஆற்றலை மறந்து தூங்கும் சமூகத்திற்கு விழிப்பூட்டி உணர்ச்சி பெறச் செய்வது சொற்பொழிவு. சிதறிக் கிடக்கும் சிந்தனை அலைகளைச் செறித்துக்கூட்டிப் பொதுமக்கள் அபிப்பிராயத்தை உருவாக்கித் தருவது சொற்பொழிவு. பணியாத எதிரிகளையும் வயமாக்கிக் கனியவைப்பது சொற்பொழிவு. "எம்மை ஏவுவது என்ன? கட்டளை இடுவீர்" என்று வேண்டுகின்ற அளவுக்கு மக்களை விரைந்தெழச் செய்வது சொற்பொழிவு.

சிறந்த பேச்சில் நேர்மை உண்டு, இனிமையுண்டு, தெளிவு உண்டு, இயைபுண்டு, சுருக்கமுண்டு. பண்புடைய சொற்பொழிவாளர் இவற்றைப் பொருத்தமுறப் பெற்றிருப்பர். உண்மையுணர்ச்சி உடைய பேச்சாளர் இவற்றைப் பெறுதற்கு முனைந்து நிற்பர்.

நாம் யாரிடத்தில் பேசுகிறோம், என்ன பேசுகிறோம், ஏன் பேசுகிறோம் என்பதைப் பேசுமுன் நம் மனத்திரையில் இட்டுப் பார்த்தால் எப்பொழுதும் பேசிக்கொண்டிருக்க மாட்டோம். எதையும் பேசோம். வளைந்து நெளிந்து முணங்கிக் குழறாமல் உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி உரைப்போம். "எழுந்து நில், என்ன பேசப் போகிறாய் என்பதைச் சொல். பேசு, பேசிவிட்டதாகச் சொல்லி அமர்ந்துகொள்" என்று பிரபல பேச்சாளர் ஒருவர் கூறுகின்றார். இதைக் கருத்தில் இருத்துவோம். நம் பேச்சு நேரான பேச்சாக இருக்கும். "உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்". உள்ளத்தில் நேர்மை இருந்தால் பேச்சில் நேர்மை பிரதிபலிக்கும். இதய நேர்மையால் வாய்பேச்சு நேரியதாகும்.

தொனியிலும் பேசுந் தன்மையிலும் இனிமை தோய வேண்டும். இனிய சொற்களால்தான் உள்ளங்களைக் கவர லாம். குறைகளை முறையிடக் கூடாதென்பதல்ல, கண்டிக்க வேண்டியதுதான் காரசாரமாகவுங்கூட; வைதா லும் வகையாக வைய வேண்டும். எங்கும் இனிமை அற வொளி பரப்பும் பெரியார்கள் பேச்சில் வெறுப்பும் பகை மையும் நிழலிடாது. அவர்கள் அடுக்கலங்காரத்திற்காகச் சொற்களுக்கு அடிமை ஆகார். அவர்கள் ஆக்கும் சொற் களை ஆள்வார்கள். அழிக்கும் சொற்களைக் கடிவார்கள். சேர்க்கும் சொற்களைச் சொல்வார்கள். சிதைக்கும் சொற் களை விதையார்கள்.

சில பிரசங்கிகளின் பேச்சு கேட்பவருக்குப் புரியாதது ஆச்சரியமல்ல. பிரசங்கிகளுக்கே புரியாதிருப்பதுதான் அதிசயம். சிந்தையில் தெளிவு ஏற்பட்டால்தான் பேச்சில் தெளிவு ஏற்படும்.

பேச்சில் இயைபு என்ருல் முன்னுக்குப்பின் முரணில் லாதது மட்டுமல்ல, கருத்துகளில் கோவையிருக்க வேண் டும். ஒரு கருத்திலிருந்து அடுத்த கருத்து எழுதல் வேண்டும். முகவுரை, சொற்பொருள் முடிவுரை எல்லாம் தொடர்போடும் அளவோடும் அமையவேண்டும். கால் மணிப் பேச்சுக்கு முக்கால்மணி முன்னுரை சொன்ஞல்? மூன்று முழச் சேலைக்கு முப்பது முழ முன்தானையா?

காலவரையறை செய்து சுருக்கமாகப் பேசுவோம். பேசுவதற்குப் பொருளில்லை என்பதா தொல்லை? சுருக்க மாகப் பேச இயலாமைதானே சிரமம். குற்றமற்ற சில சொற்களைச் சொல்ல அறிந்திருக்க வேண்டும். இதுதான் பேச்சுக் கலையின் நுட்பமாகச் சொல்லப்படுவது. இதை யுணர்ந்தால் பல சொல்ல ஆசை தோன்றுமா? "எண் பொருளவாகச் சில சொல்லவேண்டும்" என்பது பேச்சுக் கலை நுட்பம் தேர்ந்த வள்ளுவர் நமக்குத் தரும் அறிவுரை இந்த அறிவுரையை மேற்கொண்டால் திரு. பல சொல்லக் காமுறுவர் வாசாம கோசமாய் இரண்டேகால் மணி நேரி மும், திரு. சீனியா பிள்ளை சர்க்கரைப் பந்தலில் தேன்மார

பெய்தது போல மூன்றரை மணி நேரமும், திரு. கோடை இடியார் குமுறிக் குமுறி நான்கு மணி நேரமும் பேசுவாரா? அத்தனை பேரும் ரத்னச் சுருக்கமாகப் பேச மாட்டார்களா?



# சிரிப்புக் கலை

சிரிப்பு ஒரு கலை என்று துணிந்து கூறுவேன். உண்ணுவது ஒரு கலை. சீவி முடித்துச் சிங்காரிப்பது ஒரு கலை. சினிமா ஒரு கலை. சீட்டாட்டம் ஒரு கலை. பேச்சு ஒரு கலை. பிரச்சாரம் ஒரு கலை. தேர்தல் ஒரு கலை. திருட்டுத்தனம் ஒரு கலை. இவைகளே கலை என ஊர்வலம் வரும்போது, மனிதனது வயிற்றுக் கவலை தீர்ந்து, மனம் நிறைந்து அலை அலையாக எழுந்து வரும் அழகுச் சிரிப்பு மட்டும் ஏன் ஒரு கலையாகக் கூடாது என்பதுதான் என்னுடைய கட்சி.

கலைகள் அறுபத்து நான்கு என்று எவரோ ஒருவர் கணக்கெடுத்து வைத்திருக்கிறார் அல்லவா? இவற்றுள் சிரிப்புக்கலை சேர்க்கப்படவில்லை என்பதைச் சிந்திக்கும் வேளையில் அந்தக்கலாபிமானிகள் வருந்தாதிருக்க நியாயமில்லை. அறுபத்து நான்கில் அங்கம் வகிக்கும் வசீகரணம் என்னும் கலையிலும் திட்டித்தம்பம் என்னும் கலையிலும் சிரிப்புக்கு இடம் இருக்கின்றது. இதனை அறியுங்கால் பெருத்த ஆறுதல் உண்டாகின்றது. அதனால் ஆறுதலைச் சிரிப்பும் அடுத்தெழுவது ஒரு அதிசயமல்ல.

சிரிப்பை அறுபத்தி நான்கில் அடக்கில் என்? அடக்காக் கால் என்? இன்று பேசப்படும் உண்ணுங் கலை உறங்குங் கலை ஆகிய பல்வேறு நுண்கலைக் குழுவின் மொத்த

அளவில் சிரிப்புக் கலை ஒரு மில்லி மீட்டர்கூட குறைந்து விடவில்லை என்பதை எந்த மேடையிலும் சிரிப்புக் கலாபி மானிகள் காலக்ஷேபம் செய்து காட்டத் தயாராயிருக்கிறார் கள் என்று தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகின்றேன்.

தொல்காப்பியப் பெருந்தகையார்க்குச் சிரிப்பில் அள விறந்த பற்றிருந்திருக்கவேண்டும். அவர் சிரிப்பிற்குத் தான் முதல் இடம் வழங்குகின்றார். மக்களின் உள்ளத்து உணர்ச்சிகளை எட்டாக வகுத்துக் காட்டுகின்றார். அந்த எட்டினுள் முதலாவதாக அவர் அமைத்துக் கூறுவது சிரிப்பையே. அவர்க்கு முன்னால் தோன்றிய பேரறிஞர் களுக்கும் அது உடன்பாடு என்றும் தெரிகின்றது.

*நகையே அழுகை இளிவரல் மருட்கை*
*அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று*
*அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப* (தொல். 1197)

இளிவரல்-இழிவு; மருட்கை-வியப்பு; அப்பால்-அப் பகுதிப்பட்ட.

நகைப்பற்று வள்ளுவரையும் விட்டதா? அப்பற் றில் அவர் காப்பியருக்குச் சளைத்தவரல்லர். எக்காலத்தும் வேறுபடாத உயர் குடியினர்க்கு நான்கு பண்புகளை வரை யறுத்துச் சொல்கிறார் வள்ளுவர். அவற்றுள்ளும் முதல் பண்பு சிரிப்பு.

*நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்*
*வகைஎன்ப வாய்மைக் குடிக்கு* (குறள் 963)

அவ்வளவு நெடுந் தொலை போவானேன்? சிரிப்பு எவ்வளவு முக்கியமான சரக்கு என்பதை நம் பத்திரிகை நிருபர்கள் நன்கு அறிந்திருக்கின்றார்கள். அந்த அளவிற் கென்கிலும் நாம் அறிந்தோமில்லையே. எங்கோ பேசிய பேச்சு. அப்பேச்சிடைக் கிளம்பிய ஹாஸ்யம். அதைக் கேட்டு எவ்வெவர் சிரித்தாரோ? எப்படிச் சிரித்தாரோ? இச் சம்பவத்தை இலகுவில் விடுகின்றார்களா நிருபர்கள்?

சந்தர்ப்பம் தோன்ற (சிரிப்பு) என்று பிராக்கெட் போட்டு வளைத்து பாதுகாப்போடு அல்லவா பத்திரிகைகளில் உலவ விடுகிறார்கள் அரசியல் கைதிகளை போலீஸ் அதிகாரிகள் பரோலில் அலையவிடுவதுபோல. அந் நிருபர்கள் அல்லவா சிரிப்பின் மகிமையைச் சீர்பெறத் தெரிந்தவர்கள் ?

அந்நியர் ஆட்சியின் முன்னும் பின்னும் ஆட்சியின் போதும் நம் நாட்டில் அநேக ராஜாக்கள் இருந்தனர். அவர்கள் யாவரும் நம் இந்தியக் குடியரசு நாட்டிலே நித்திய ரஜாவில் போய்விட்டார்கள். போகட்டும். இந் நாட்டுக் குடிகளாகிய நாமே இந்நாட்டு மன்னர்கள் என்று பாரதியார் சொல்லிவைத்ததில் உண்மையைவிட உபசாரந் தான் அதிகம். என்னவோ ஒரு சில உண்மை ராஜாக்கள் இருக்கவேண்டிய கட்டாயத்தை நாம் உணராமலில்லை. அப்படிப்பட்ட ராஜாக்கள் இனி எப்போ வருவார்களோ எப்படி வருவார்களோ தெரியவில்லை என்றாலும் என்ன குடி முழுகிப்போனது? இக்காலத்தில் நகைச்சுவையை நாடெங்கும் கொட்டுகின்ற ஒன்றே காரணமாக நம் மிடையே சிரிப்புராஜாக்கள் செங்கோல் செலுத்துவதைக் கண்டு நாம் மகிழ்ச்சிப் பெருக்கடையாமல் இருக்க முடியுமா? அவர்களை நாம் எத்துணை மரியாதையாக நகைச் சுவை அரசர்களே என்று உணர்ச்சி மேலிட்டு உள்ளன் போடு அழைத்து உவகை கொள்கிறோம்! எத்துணை கண் ணியமாக நடத்திக் களிப்படைகின்றோம்! வாழ்க சிரிப்பு ராஜாக்கள்! வளர்க நமது சிரிப்புக் கலைப்பண்பு!



# ஒன்று கேட்கோம்

பொதுக்கூட்டத்தில் ஒருவர் பேசிக்கொண்டிருக்கிறார். திடீரென்று ஓர் உற்சாகமான கட்டம். அபூர்வமான கருத்தினை ஆணித்தரமாக அறைகின்றார். அல்லது எதிரியை மடக்கும் சொற் சரத்தை இலாவகமாகப் பெய்கின்றார். சபையில் "கேளுங்கள், கேளுங்கள்" என்ற உணர்ச்சி நிரம்பிய குரல் ஓங்கி எழுகின்றது.

இந்தக் காலம் கேள்வியின் காலம். கூட்டங்களில் கேட்பது மாத்திரமன்று. பிறர் "கேளுங்கள், கேளுங்கள்" என்ற கோஷமிடக் கேட்பது மாத்திரமன்று. கேள்வி கேட்கும் காலம். எப்பெருந் தலைவர்க்கும் கேள்விச்சீட்டு சிட்டெனப் பறக்கும் சிந்தனைக்காலம். கேள்விவரிசை இல்லாத கூட்டம் சோபிக்காத கூட்டம் என்று கருதும் அளவில் "கேள்விஞானம்" பரவி வருகின்றது.

கேள்விப்பகுதி இல்லாத பத்திரிகையும் கேட்பாரற்ற பத்திரிகை ஆகுமோ என்று எண்ணவேண்டி இருக்கின்றது. குண்டுச் சட்டியைக் கேளுங்கள், குத்து விளக்கைக் கேளுங்கள், அதைக் கேளுங்கள், இவரைக் கேளுங்கள் என்று வாசகர்களைக் கேட்கத் தூண்டுவதில் ஒன்றையொன்று போட்டி போடுகின்றன. என்ன கேட்கச் சொல்லுகிறார்கள், எப்படி விடை இறுக்கிறார்கள் என்று கேட்கத் தேவையில்லை. இளைஞர்களும் பெரியார்களுமான எண்ணிறந்த கலாரசிகர்கள் கேட்கும்......வெறுங் கேள்விகளும் வேடிக்கைப் பதில்களும் பத்திரிகைகளின் பக்கங்களை நிரப்புகின்றன. இந்தப் பாங்கில் எத்தகைய ஞானம் பரவும்?

கேள்விக்காகக் கேள்வி கேட்கும் விநோதப் பிரியர் ஆகட்டும், சினிமாத் துறையன்றி வேறு துறையறியாத உல்லாசப்பிரியர் ஆகட்டும், அவர் தம் கேள்வி ஆர்வத்தைப் பாராட்டாமல் இருக்கமுடியாது.

கேள்வியில் ஆர்வம் மட்டும் போதுமா? கலைரசிகர் கேள்வி சாரமுள்ள கேள்வியாக இருக்கவேண்டும்.

உண்மை நாட்டமுடையவர் கேள்வி, அறிவைத் தூண்டுங் கேள்வியாக, சிந்தனையைக் கிளறும் கேள்வியாக ஆண்மையை வளர்க்கும் கேள்வியாக அமையும். இத்தகைய கேள்விகள் பக்குவம் பெற்ற உள்ளங்களிலிருந்து தான் எழும்.

திருவள்ளுவப் பெருந்தகையின் புனித உள்ளம் கேள்விச் செல்வத்தைச் செல்வங்களுள் தலைசிறந்த செல்வமாகக் கருதுகின்றது. அவர் நம்மைக் கேட்கத் தூண்டுகிறார். கற்றவரும் கேட்க வேண்டும். கல்லாதவரும் கட்டாயமாகக் கேட்க வேண்டும். "கற்றிலனாயினுங் கேட்க" என்பது அவரது அன்புக் கட்டளை.

யாரைக் கேட்கவேண்டும்? என்ன கேட்கவேண்டும்? எப்படிக் கேட்கவேண்டும்? இவற்றை நாம் நம் உள்ளத்தையே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

திருவள்ளுவரைக் கேட்டால் அவர் சொல்வார். "அறிவொழுக்கஞ் சான்ற ஆன்றோரைக் கேளுங்கள். வாழ்க்கைக்கு உறுதிதரும் வழிவகைகளைக் கேளுங்கள். அறிந்து கொள்ள வேண்டுமென்ற அவாவோடும் மெய்ப்பொருள் கண்டு பயன்பெற வேண்டும் என்ற பக்தி சிரத்தையோடும் கேளுங்கள்" வழுக்கத் தலங்கள் நிறைந்த வாழ்க்கைப் பாதையில் ஒழுக்கஞ் சான்ற உத்தமர் வாய்ச் சொல்லே நமக்கு உற்ற ஊன்று கோலாக அமையும்.

"இழுக்கல் உடையார்க்கு ஊன்றுகோல் அற்றே ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்" என்ற வள்ளுவர் வாக்கைக் கேளுங்கள், கேளுங்கள்.



# சிந்தனைச் சிற்பி

நல் வாழ்வுக்கு உறுதுணை செய்யும் அரிய கருத்துக்களை ஈர்ப்பாற்றலுடனும் எழில் நலத்துடனும் மக்கள் உள்ளங்கொள்ள அமைத்துக் காட்டி அவற்றில் தோய்வார் உண்மைப் பொருளைத் தாமே நாடி அறியத் தூண்டுகின்ற உத்தமரைச் சிந்தனைச் சிற்பி என்று அழைத்து மகிழ்கின்றோம். உள்ளபடியே சிந்தனைச் சிற்பி என்னுந் தொடர் மிகவும் கச்சிதமாக அமைந்துவிட்டது. வழக்காற்றில் கணிசமான இடம் பெற்றுவிட்டது.

பொன்னைக் கொண்டு தொழில் செய்பவர் பத்தர். இரும்பைக் கொண்டு தொழில் செய்பவர் கொல்லர். மரத்தைக் கொண்டு தொழில் செய்பவர் தச்சர். செம்பைக் கொண்டு தொழில் செய்பவர் கன்னர். கல்லைக் கொண்டு தொழில் செய்பவர் சிற்பர். இவர்கள் அனைவரும் பிரமாதமான கலைஞர்கள் என்பது இவர்களைக் குறிக்கும் "விஸ்வகர்மர்" என்ற சொல்லாலே விளங்கும்.

பிரம்மாவுக்கு விஸ்வகர்மர் என்ற பெயரும் உண்டு. உலகத்தைப் படைப்பவன் என்னும் பொருளிலே அவனுக்கு இப்பெயர் வழங்கி வருகின்றது. தொழில் உலகிலும் கலை உலகிலும் கண்கண்ட பிரம்மாக்கள் இந்த விஸ்வகர்மர்கள். இந்தத் தொழிற் கலைஞர் குழுவின் சிகரமாக விளங்குபவர்கள் சிற்பிகள். சிற்பி கல்லால் படி வம் சமைக்கின்றான். ஒரு கல்லை வாயிற்படி ஆக்குகின்றான். வருவார் போவார் மிதிக்க வைக்கின்றான். இன்னொரு கல்லைத் தெய்வச்சிலை ஆக்குகின்றான். சிற்பி சுதந்திரமான தொழிலாளி. ஆக்கவும் அழிக்கவும் வல்லமை பெற்ற அற்புத வரத்தன் அருங்கலை விநோதன்.

*"ஆங்கொரு கல்லை வாயிலில் படியென்றமைத்தனன்*
*சிற்பி மற்றொன்றை*
*ஓங்கிய பெருமைக்கடவுளின் வடிவென் றுயர்த்தினன்*

என்று அவனது பெருமையைப் பாரதியார் உணர்ந்து கூறும் திறம் உணரத் தக்கது.

செயலுக்குத் தந்தையும் தாயும் சிந்தனையே. மனம் படைத்த மனிதன் சிந்திக்கின்றான்; செயலாற்றுகின்றான். சிந்தனை தூயதானால் செயல் தூயதாகின்றது. சிந்தனை வன்மையானால் செயல் வன்மையாகின்றது.

*"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்*
*திண்ணிய ராகப் பெறின்"*

மக்களைச் செயலுக்கு ஏவும் தலைவர்கள் இதனை நன்றாக அறிந்திருக்கின்றார்கள். அவர்கள் பேச்சின் முடிவெல்லாம் சிந்தித்துச் செயலாற்றுங்கள் என்ற தன்மையில் அமையும். "என்னைப் பின்பற்றுவோர் சிந்திக்கக் கூடாது, நான் இட்ட கட்டளையைக் கண்மூடி நிறைவேற்ற வேண்டும்" என்று இது வரைக்கும் எந்தத் தலைவரும் சொன்னதில்லை. அப்படிச் சொல்லியிருந்தால் அதைச் சொன்ன அவரே கண்ணை மூடிக்கொண்டு சொன்னவராதல் வேண்டும், புறக்கண்களை மட்டுமல்ல அகக்கண்களையும் கூடத் தான். அவர் தன்மானத் தந்தை என்று பறைசாற்றப் படலாம். பெரியார் பட்டம் பெற்றிருக்கலாம். பகுத்தறிவுக் கோட்டைக் காவலில் கெட்டிக்காரராக இருக்கலாம். "லை"க்கு விடுதலை வாங்கித் தந்த இயக்கக் கண்காணியாக இருக்கலாம். ஆனால் "உங்கள் சிந்தனைக்கு விடுதலை கொடுத்து, என்னுடைய சொந்தத் தயாரிப்பான ரெடிமேட் (READY MADE) சிந்தனையை எனக்கே சொந்தமான, என் பெயருக்கே பதிவான "பகுத்தறிவு" ட்ரேட் மார்க்கைப் பார்த்து வாங்கிக் கொள்ளுங்கள்" என்று எந்தத் தலைவரும் எந்த மகத்தான சிந்தனைச் சிற்பியும் சொல்லக்கூடாது.

"செல்வ நாயக்கருக்கு அவருடைய கண்களை நம்ப முடியவில்லை" என்ற தோரணையில் சில சிறுகதைகள் தொடங்கும். இது ஆங்கிலத் தொடரின் சொல்லுக்கு சொல் நேர் மொழி பெயர்ப்பால் வந்த தோஷம் என்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்தக் கதாநாயகன் தன் கண்களையே நம்பாதே போனால் வேறெதைத்தான் நம்பப்

போகின்றான்? கண்களை நம்பாத செல்வ நாயக்கர் போல் கடவுளை நம்பாத நாயகர்களை (தலைவர்களை) மக்கள் எதைக் கொண்டு எப்படி நம்புவார்கள்? அவர்களுடைய அழி வழக்கை நம்புவார்களா? அவர்தம் தெய்வ நிந்தனையை நம்புவார்களா? அவர் தம் அகங்காரத்திற்கு ஆலயமும் வழி பாடுந் தேடும் ஆணவத்தை நம்புவார்களா?

வள்ளுவரைப் போல் சிந்தனைச் சிற்பிகள் நமக்கு வேண்டும்.

*"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு"*

என்றபடி உண்மை காணும் உரிமை பேணும் உயர்தரமான சிற்பிகள் வேண்டும்.

*சிந்தனை உனக்குத் தந்தேன்*
*திருவருள் எனக்குத் தந்தாய்*

என்று இறைவனோடு கொஞ்சிப் பேசும் நெஞ்சம் உடைய சிந்தனைச் சிற்பிகள் வேண்டும். வாழ்வின் பரிபூரணத்வத்தைக் காட்டும் தெளிந்த கண்ணாடிகளான சிறந்த சிந்தனைச் சிற்பிகள் வேண்டும்.



# பிரச்னை

ஒரு புத்தகக் கடையில் மாணவருக்கேற்ற பாடப் புத்தகம் தேடும் பிரச்னையில் ஈடுபட்டிருந்தோம். அங்கே ஒரு அன்பர் வந்தார். "பிரச்னைக்குத் தமிழ் என்சொல்?" என்று என்னை வினவினர். நான் "புதிர்" என்று பதிலுரைத்தேன். அப்புறம் தேடும் பிரச்னையைத் தொடர்ந்தேன். தனித் தமிழ்ப் பற்றே வடிவாகி வந்த அன்னருக்குத் திருப்தி ஏற்படவில்லை. தயங்கி நின்றுர். "ஏன் இந்தப் பிரச்னே. பிரச்னையையே தமிழாக ஆளலாம்" என்று உடனிருந்த ஒரு பெரியவர் உடனடியாகத் தீர்ப்புச் சொன்னர். ஆனல் என்னைக் கடாவிய அந்த மெய்யன்பரின் பிரச்னை தீர்ந்ததாகத் தெரியவில்லை. தயங்கிய வண்ணமே வழி நடந்தார்.

பிரச்னை ஒரு உலகப் புகழ்படைத்த சொல். அதன் பெருமையே பெருமை. அதனைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாள் என்று எண்ணுகின்றவர் எத்தனை பேர்? தத்துவ சாஸ்திரிகள் அரசியல் அறிஞர்கள் பொருளாதார நிபுணர்கள் தொழில் நுட்பக் கலைஞர்கள் எழுதும் எழுத்துக் கோவையில் "பிரச்னை" புகாத இடமில்லை. சமூகப் பெரியோர்களோ தொழிலாளர் தலைவர்களோ "பிரச்னை" இல்லாமல் பேசுவதுண்டா? பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் பாட்டாளிகள் பாமர மக்கள் ஆண்கள் பெண்கள் அனைவர் நாவிலும் அன்றடப் பேச்சிலும் களிநடம் புரிவது பிரச்னையன்றி வேறென்ன? உலக சமாதானப் பிரச்னை முதல் உப்புப் புளி மிளகாய்ப் பிரச்னைவரை உலக அரங்கில் நாட்டில் சமுதாயத்தில் குடும்பத்தில் தனி நபரில் ஏற்பட்டுள்ள பிரச்னைகள் எண்ணித் தொலையுமா? ஏட்டில் அடங்குமா? நாகரிகம் மேலிட்டுப் பண்பாடு பெருகி வரும் இப்புத்துலகில் பிரச்னைகள் புற்றீசல் எனக் கிளம்பி வருகின்றன என்றுல் அது மிகைபடக் கூறியதாகாது.

அன்பு நெறியால் தழைக்க வேண்டிய அவனி, அங்கே அணுக்குண்டு அதிர்ந்தது. அந்த அதிர்ச்சியில் உலக சமாதானம் ஒரு பெரும் பிரச்னை என்பதல்லாமல் மிகச் சிக்கலான பிரச்னையாக உருவெடுத்துக் கோரத் தாண்டவம்

ஆடுகின்றது. அணுக்குண்டு ரகசியம் அமெரிக்காவுக்கு மட்டும் தெரிந்திருக்கக் கூடாதா? அதை ரஷ்யாவும் அறிந்து கொண்டது என்பது இந்தச் சிக்கலான பிரச்னையிலிருந்து சிதறலான வழிப்பிரச்னை.

நம் பாரத பூமியில் முன்பெல்லாம் ஒரேயொரு பிரச்னை தான் தலை தூக்கி நின்றது. அதுதான் வெள்ளைக்காரர் வெளியேறும் பிரச்னை. அந்தப் புண்ணியவான்களும் வெளியேறினார்கள். நாமும் நிம்மதியாக இருந்தோம் என்பதற்கில்லையே. அவர்கள் போகிற போக்கிலேயே பாக்கிஸ்தான் பிரச்னையையும் பண்ணிவிட்டுப் போனார்கள். காஷ்மீர் பிரச்னையும் ஹைதராபாத் பிரச்னையும் உடன் பிறவிப் பிரச்னைகள். திராவிடப் பிரச்னை திராப் பிரச்னை. ஒப்பேருத பிரச்னை என்று உரைப்பாரும் உளர். அகதிகள் பிரச்னை ஆற்றொணுப் பிரச்னை. உற்பத்திப் பிரச்னை உணவுப் பிரச்னை உடைப் பிரச்னை ஒருபுறம். வர்த்தகப் பிரச்னை தொழில் பிரச்னை கல்விப் பிரச்னை இன்னொருபுறம். கல்விப் பிரச்னையிலும் பள்ளிகளில் கல்லூரிகளில் இடம் நெருக்கடிப் பிரச்னை நாளுக்கு நாள் விசாலமான பிரச்னை ஆகிவருவது கவனிக்கத்தக்கது நாட்டு மொழிப் பிரச்னை இந்திப் பிரச்னை மாகாணப் பிரச்னை பிரதேச மொழிப் பிரச்னை மற்றொரு புறம்.

சமூகத்தில் தீண்டாமைப் பிரச்னை ஒருவழியாகத் தீர்ந்து வருகின்றது. இருதாரத் திருமணம் போன்ற இடர் தரும் பிரச்னைகள் சட்டபூர்வமாக மட்டந்தட்டப்படுகின்றன. கள்ளுச் சாராயக்கடை மூடு பிரச்னையையொட்டி பிரன்ச் பாலிஷ் பிரச்னை ஜிஞ்சர்பெரி பிரச்னை போன்ற புதிய பிரச்னைகள் பெருகி வருகின்றன.

மடாதிபதிகளினிடையே தோன்றிய நவமான விழிப்பின் பயனுக அதிகம் அதிகமான பள்ளிக்கூடங்கள் பிரசுரங்கள் பிரசாரங்கள் மூலமாய் நாட்டில் கல்வியின்மைப் பிரச்னையின் கனம் குறைகின்றது. அறியாமைப் பிரச்னையும் அருகி வருகின்றது.

கண்ணைக் கவரும் வர்ண விளம்பரங்களைக் கொண்டு படாதிபதிகள் செய்யும் பிரச்சாரத்தில் மயங்கிய *ஸ்ரீமான்* பொதுஜனம் சினிமாக் கொட்டகையில் காசு கொட்டப்

பழக்கம் பெற்று வருகின்றார். இங்கிலையில் நம்முன்னே இருக்கும் பிரச்னை ரசிகர்கள் எளிதாக டிக்கட் வாங்க முடியாமல் க்யூ வரிசையில் தவியாய்த் தவிக்கும் பிரச்னையேயாகும்.

தலைவர் ராஜாஜியின் துணிவான சேவையால் ரேஷன் பிரச்னை ஒழிந்து போயிற்று. அடுத்தபடி விலைப் பிரச்னை வீட்டு வாசலில் நிற்கிறது. வீட்டு வாசல் என்றதும் ஞாபகம் வருகின்றது. எந்த நகரத்திலும் வீட்டுப் பிரச்னை என்ற வாட்டும் பிரச்னை இருந்து வருகின்றது.

தனியனின் பிரச்னையே அலாதி. அவன் வாழ்வின் வசதிகளைப் பெருக்கக் கற்றுக்கொண்டான், வருவாயைப் பெருக்கிக்கொள்ளக் கற்ருனே? இல்லை. வருவாய்க்கு மிஞ்சிய செலவே அவனது பெரும் பிரச்னை.

*சம்பளத்தை வாங்கிப் பார்த்தால்*
*தம்படியும மிச்சமில்லை—கடவுளே*
*அம்பலமாய் நிற்கிருேமே—கடவுளே*

என்று தந்தனப் பாட்டுப்பாடும் பிரச்னையே அவனால் தாங்க முடியாத பிரச்னையாகத் தலைமை பெற்று உலவுகின்றது.

பிரச்னைபற்றிய இந்தக் கட்டுரையில் மேலும் பல பிரச்னைகளைப்பற்றிக் கூறவேண்டுமென்ற ஆசை. ஆனால் நூலில் இடப்பிரச்னை ஒன்றிருப்பதை மறப்பது உசிதமல்ல. எனவே, இத்துடன் நிறுத்திக்கொள்கின்றேன். அதுவே தற்போது என் முன்னுள்ள நெருக்கடியான பிரச்னை என்க.



# மெய்ப்புலவன்

குட்டப்ப ராயடு என்ற குறுநில மன்னன் இருந்தான். அவன் பிறப்பால் தெலுங்கன். தமிழ் நாட்டின் ஒரு பகுதி அவன் ஆட்சியில் அகப்பட்டுக் கொண்டது. ராயடு தமிழை வளர்க்க ஆசைகொண்டான். கலைமகள் திருநாளில் கவிஞர்களுக்குப் பேட்டியளித்தான். அவர்களுடைய பாட்டைக் கேட்டுப் பரிசளிக்க முனைந்தான்.

கவிஞர் சபை கூடிற்று. கவிஞராகத் தோன்றிய ஒருவன் பாடத் தொடங்கினான்.

*ராயடு ராயடு காவெட்டி ராயடு*
*கோவைப் பழம்போல சிவந்த ராயடு*
*குன்றிமணி போலச் சிவந்த ராயடு*
*காவிக்கல்லு போல சிவந்த ராயடு*

என்று ஓலைச் சுருள் விரித்து ஒய்யாரமாகப் பாடினான். பக்கத்திலிருந்த பெரியார்கள் 'சபாஷ், சபாஷ்' என்று சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தார்கள். ராயடுவுக்குப் பொருள் தெரியவில்லை. பலரும் மெச்சுவதைக் கேட்டுப் பாட்டு நன்றாகத்தான் இருக்க வேண்டுமெனத் தீர்மானித்துப் புலவருக்குப் பொற்பதக்கம் அளித்தான்.

இதனைக் கண்ட புலவத் தோழன் ஒருவனுக்குப் பொறாமை பிறந்தது. "இந்தப் பாட்டில் தவறு இருக்கின்றது. உவமையில் பிழையுண்டு. குன்றிமணி, காவிக் கல்லையும் கோவைப் பழத்தையும்போல் சிவந்தது ஆகாது, அது மூக்கில் கருத்திருக்கின்றது ராயடு அவ்வாறு இல்லை. எனவே பாட்டு வழுவுடையது" என்று வாதித்தான்.

பரிசு பெற்றவனுக்குப் பாடும் புலமை இல்லை. ஆனால் சமயோஜிதமாகப் பேசும் புலமை இருந்தது. வழுவமைதியொன்று வாய்ப்பாக வந்து அவனுக்குத் துணை செய்தது.

"ஐயன்மீர்! இவன் போல்வார் எதிர் வழக்கிட்டுக் குற்றங்கூற முன்வருவார்கள் என நான் அறிவேன். இதனை உத்தேசித்தே எனது பாட்டில் குன்றிமணிக்குமுன்

கோவைப்பழத்தை வைத்தேன். பின்னே காவிக்கல்லை வைத்தேன். பழத்தைப் பிழிந்தால் சாறு வரும். அச் சாற்றில் காவிக்கல்லை இழைத்தால் சிவந்த குழம்பு உண் டாகும். அதைக் கொஞ்சம் எடுத்து குன்றி மணியின் மூக்கில் தடவினால் அதன் களங்கம் மறையும். முழுமை யும் சிவப்பாகும். இவன் போன்றோர் இதைத் தெரிந்து கொள்ளாததையிட்டு நான் அதிசயிக்கவில்லை. நல்ல ரசிகர் களே எனது பாட்டை ரசிப்பார்கள் " என்று சாதித்தான்.

வரிவரியாக எழுதப்படுவதெல்லாம் பாட்டு என்று பேசுபவர்கள் இருக்கின்றார்கள். இக்காலத்திலும் இருக் கின்றார்கள். இங்கும இருக்கின்றார்கள். எங்கும் இருக் கின்றார்கள்.

*ஊரான் ஊரான் தோட்டத்திலே*
*ஒருவன் போட்டான் சுத்தரிக்காய்*
*காசுக்கு இரண்டாய் விற்கச் சொல்லிக்*
*கடிதம் போட்டான் வெள்ளைக்காரன்*
*சிடை முறுக்கிரண்டு சேர்ந்தாப்போ லேதின்றால்*
*தாடை வலியைத் தரும்*

என்பன போன்ற பாட்டுக்களை எடை போட்டுக் காட்டி "ஆகா! என்ன அழகு! என்ன அற்புதம்! என்ன நயம்! என்ன பாவம்!" என்று கடைச் சரக்கு விற்பது போல நயஞ்சொல்லி வர்த்தகஞ்செய்யும் கவிதை அன்பர் கள் இன்றும் உளர். இவர்கள் ஆசிரியர் திரு. வி. க. சொல் லுவதைக் காதுகொடுத்துக் கேட்பார்களாக." பாட்டு என்பது சொல்லடுக்கன்று. அணிச் செறிவன்று. யாப்புக் கட்டுமன்று. மனத்தினின்று விரைந்தெழும் மகிழ்ச்சியின் பொங்கலே பாட்டு." மெய்ப் புலவனுக்கு யாப்பு அமைதி யும் அணி அழகும் சொல்லடுக்கும் வெறுங் கருவிகளே. பொருள் ஆழந்தான் அவன் குறிக்கோள். சொல்லடுக்கு யாப்பமைதி அணி நலம் இவை உடல்; பொருள் உயிர். 'பலவகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல் பல சொல் லால் பொருட்கு இடனாக உணர்வினில் வல்லோர் அணி பெறச் செய்வன செய்யுள்' மெய்ப்புலவன் சொல்லை ஆளுகின்றான். சொல்லால் ஆளப்படுவதில்லை 'எனைவைத்தி எனைவைத்தி எனப்பதங்கள் இடையிடையே நின்றிரந்து வேண்ட இனி வைப்பாம் இனி வைப்பாம் பொறுத்திடு

மின், பொறுக்கிடுமின்' என்று கூறி உள்ளத்தில் கிளர்ந்து எழும் மெய்யுணர்ச்சிகளை செவ்விய முறையில் சொன்னயம்படச் சொல்லும் ஆற்றல் உண்மைப் புலவனுக்கே இயல்பாம். மக்கள் பன்னெடுங்காலம் செய்யும் பேருழைப்பின் பயனுகக் காணக்கூடிய உண்மைகளை அவன் ஒரு நொடியில் காண்கின்ருன். அவற்றை மக்களின் உளக் கோயிலில் என்றும் நிலவச் செய்கிருன்.

அவன் சொல்லும் பொருள் எண்ணும் பொருளாக அமைகின்றது. நவில்தோறும நவில்தொறும் நவநயம் காணும்படி மிளிர்கின்றது அவன் பாட்டு. அவன் சொல்லே அடுக்கி இல்லாத ஒன்றினை இயற்றி, இருக்கின்ற பொருளுக்கு வேறு எவராலும் அளிக்க இயலாத ஏற்றம் அளித்து நமக்கு நல்குகின்ருன்.

நம் பார்வைக்கு உயிரற்றுப் புல்லிதாய்த் தோன்றும் பொருட்கள் அவனுடைய காட்சிக்குப் பேருண்மைகளைப் பேசும் பெற்றி வாய்ந்தன ஆகின்றன. காற்றில் அசையும் மென்மலர் அவன் கண்ணீர் வடிக்கவும் கூடாதபடி அத்துணை ஆழ்ந்த சோக எண்ணத்தை அவனிடம் எழுப்பும். அவனோடு மரங்கள் பேசும். நீரோடைகள் அவனுக்கு நல்ல நூல்களாய் அமையும். கற்பாறைகளிடமிருந்து அவன் அறவுரை பெறுவான்.

இதய அடித்தளத்திலிருந்து எழும் அனுபவ உணர்ச்சி மெய்ப் புலவனுக்கு உரியது. அவ்வுணர்ச்சியின் மொழி பெயர்ப்பே பாட்டு. இத்தகைய அனுபவ உணர்ச்சியும் அதனைப் பாட்டிலே வடிக்கும் ஆற்றலும் எல்லோருக்கும் வாய்ப்பதில்லை. இந்த வாய்ப்பு இயற்கையிலேயே வாய்க்கப்பெற்ற பாவலனே மெய்ப்புலவன்.

இம் மெய்ப்புலவன் நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நற்கவியும் பாடும் பணியைக் கடமை அறிந்து ஆற்றுவான். கவி சொல்லவல்ல நல்வித்தையை நாட்டு மக்களின் உலக மக்களின் இன்பதுன்பங்களை, அவர் நம்பிக்கைகளை இவை முதலிய இதய உணர்ச்சிகளைச் சொற்சித்திரங்களாக்கி அவற்றைக்கலைக் கோயிலில் நிலைபெறச் செய்வான், கலைவாழ அவன் வாழ்வான். அவன் புலமையும் வாழும்.

# வெள்ளைக்குடியர்

குடியரில் வெள்ளைக் குடியர் கருப்புக் குடியர் என்ற வேறுபாடுகள் என்ன இருக்கக்கூடும் என்று நினைக்கவும் கூடும். அப்படிப்பட்ட வித்தியாசம் அவர்களிடம் இல்லை தான். வேறுபாடு அறிந்துகொள்ளாத, காட்டிக்கொண்டாலும் நீட்டிக்கொள்ளாத ஒன்றுபட்ட ஒப்புயர்வற்ற சமத்துவ சமதர்மக் கூட்டுறவுச் சமுதாயம் ஒன்று உண்டானல் அது குடியர் சமுதாயம் என்பதைக் குவலயம் ஒப்புக்கொள்ளும். சாமான்ய ஏற்றத் தாழ்வுகள் வேறுபாடுகள் இருந்தே தீரும். நாம் இவற்றைத் தடுக்க முடியாது. அந்தரங்கக் குடியர் பகிரங்கக் குடியர் அமைதிக் குடியர் ஆரவாரக் குடியர் புதுக்குடியர் பழைய குடியர் கோப்பைக் குடியர் பிப்பைக் குடியர் புட்டிக் குடியர் சட்டிக் குடியர் ஓசிக் குடியர் காசுக் குடியர் என்னும் குடியர் வகையர்கள் யாவரும் செயற்கை வேற்றுமைகளால் உருவானவர்களே. இத்தனைப்பட்ட வேற்றுமைகளிடையேயும் உலகத்தில் வேறு எவறும் காண முடியாத ஒற்றுமையைக் கண்ட சாதனைக்காரர் குடியர் குடியரே. அவர்களிடம் வடக்கும் தெற்கும் வகையுற இணங்கும். கிழக்கும் மேற்கும் கனிவுறக் கலக்கும். இந்த உலகிலே உண்மையான சமரசக் கூட்டம் சோமரசக் கூட்டம் ஒன்றே என்று எண்ண இடம் ஏற்படுகின்றது. சொல்விளம்பி என்று குழூஉக் குறியாகச் சொல்லப்படும் மதுபானத்தைச் சோமபானம் என்றும் நம் முன்னோர் வழங்கினர். இது ஒரு காலத்தில் யாக பானமாகவும் கருதப் பெற்றது. இதில் பங்கு பெற்ற யாவரும் இனநிற பிற வேற்றுமை பற்றியிராது ஒரே பாத்திரத்தைச் சுற்றியிருந்து அதில் உள்ள பானத்தை ஒருங்கியைந்து குடித்துக் கொண்டாடியதாகக் கேள்விப்படுகின்றோம்.

இலங்கைவாழ் நம்மவர் இன்றும் மதுக்கடையைத் தவறணை என்று அழைக்கின்றார்கள். TAVERN என்ற ஆங்கிலச் சொல்லை அவர்கள் தவறணை ஆக்கிக்கொண்டதில் தவறொன்றுமில்லை. அந்த அழகான சொல்லின் நயத்தை நினைக்கக் களிப்பு உண்டு; காண மகிழ்ச்சி உண்டு.

தன் அருமைச் சேயரை உரிமை நேயத்தோடு, தாய் அணைக்கும் தன்மை போல, தவறு செய்யும் குடியரைத் தக்கார தகவிலர் என்ற பாகுபாடின்றி அவர் அனைவரிடத்தும் ஒரு படித்தான தனிப்பெருங் கருணை காட்டி அவர் தம் குறைபாடுகளையும் ஏற்றருளி அணைக்கின்ற காரணம் பற்றி அல்லவா மதுக்கடையைத் தவறு+அணையாக அன்னவர் அமைத்துக்கொண்டனர். இது நிற்க.

மேலே சொன்னவை அப்படியே சரிந்து விழுந்துவிடும் என்ற அச்சத்தால் அப்படிச் சொல்லவில்லை. கடிதங்களில் "நலம். நலமறிய அவா. நிற்க...... என்று வேறுபாடு பல விஷயங்களைச் சேர்த்து எழுதுகின்ற சம்பிரதாயப்படி "நிற்க" என்பது தானாக முற்பட்டு வந்து நின்றுகொண்டது. சரியாய்ச் சொல்லவேண்டுமானால் இது ஒருபுறம் இருக்க என்று சொல்லலாம் அவசியம் ஏற்படுகின்றபோது. இது ஒருபுறம் இருக்க.

வெள்ளைக்குடி நாகனார் சங்ககாலப் புலவர்களில் எனக்கு மிகவும்பிடித்தமான புலவர். இவரைப்பற்றி ஒரு சில கூறத்துணிந்தேன். தொடங்கினேன். நீண்ட பெயரை நறுக்குத்தறித்துச் சுருக்க வேண்டும் என்ற ஆசை. அந்த ஆசை மேலிட்டால் வெள்ளையர் வெள்ளையர் என்று அரற்றிப் பார்த்தேன். அது நம்மை இரண்டு நூறு ஆண்டுகளுக்கு மேலாக அடக்கி ஒடுக்கி ஆண்ட அதிகார வர்க்கத்தினரை அல்லவா சுட்டும் என்று விட்டு விட்டேன். சரி, நாகனார் என்போம் எனிலோ அப்பெயருடைய புலவர் நம் தமிழகத்தில் பலர் உளர். மதுரைப் பூதன் இளநாகனார் மதுரை மருதன் இளநாகனார் என்பவர் அவருள் ஒரு சிலர். எனவேதான் என் உளங்கவர் புலவரை வெள்ளைக்குடியார் என்றேன் விளக்கமும் வரைந்தேன். இது ஒருபுறம் இருக்க.

இப்புலவர் பெருமானுக்கு எந்த ஊரும் அவர்தம் சொந்த ஊர் ஆம் எனினும் இவர் பிறப்பிடம் வாழ்விடம் வெள்ளைக்குடி. அது சோழ நாட்டில் உள்ளதாகச் சொல்லப்படும். தமிழ் நாட்டில் குடி என்னும் பெயர்வர அமைந்த ஊர் பெயர்கள் பண்டும் இன்றும் பல உண்டு. சிறுகுடி, இளையான்குடி, செங்காட்டங்குடி, கற்குடி, கருக்குடி, விற்குடி, வேள்விக்குடி, திருக்குறுங்குடி என்

பன புராணத் தொடர்பும் பக்திப் பாடல்களின் இயையும் உடையன. அரியக்குடி, செம்மங்குடி, இடையன்குடி, திட்டைக்குடி, தூத்துக்குடி, மேச்குடி, லால்குடி, இக் காலத்தில் விளங்கும் குடிகளில் சில. வெள்ளைக்குடி சங்க காலத்தில் புலவர் உறையும் புகழ் உடையதாக விளங்கி இருத்தல் வேண்டும்.

வெள்ளைக்குடி நாகனார் இயற்றிய பாடல்கள் நற்றிணையில் இரண்டும் புறநானூற்றில் ஒன்றுமாம். இவர் இன்று நம்மத்தியில் இருந்தால் மக்கள் சபையில் உழவர்களின் பிரதிநிதியாக இருந்து அவர் தம் உரிமைக்காகப் போராடிக் கொண்டிருப்பார். வெற்றியும் கண்டிருப்பார். இது ஒரு புறம் இருக்க.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் உழவர்களின் நிலை உணராது வரிவிதித்தான். அவனது தண்டத் தலைவர்கள் தாம் கொண்டதே கோலமாக விவசாயிகளைக் கசக்கிப் பிழிந்தனர். அப்போது உழவப் புலவர் நாகனார் அரசவை சென்று உரிமை முழக்கஞ் செய்தார். அம்முழக்கத்தை இன்றுங் கேட்கலாம்.

*“கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை*
*வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய*
*குடிமறைப் பதுவே கூர்வேல வளவ!*

.................................................................

*பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை*
*ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே*
*மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்*
*இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்*
*காவலர்ப் பழிக்குமிக் கண்ணகல் ஞாலம்*
*அதுநற் கறிந்தனை ஆயின் நீயும்*
*நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது*
*பகடுபுறந் தருநர் பாரம் ஓம்பிக்*
*குடிபுறந் தருகுவை யாயின் நின்*
*அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே”*

ooOOooo

# திருஅமுது

கைப்பு, கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு எனச் சுவை ஆறு வகைப்படும். இவற்றுள்ளே கற்காலந்தொட்டுத் தற்காலம்வரை இனிப்புச் சுவைக்கு இணையானதொரு சுவை இல்லை. அது தன்னேரில்லாத் தலைமை பெற்றது. அதற்கு இருக்கின்ற கிராக்கி வேறெதற்கும் இல்லை. கைப்பையும் கார்ப்பையும் நாம் சுவைக்கின்றோம் என்பது மெய்தானோ? என்னவோ? சுவைக்கின்றோம் என்று சொல்லும்போதுகூட முகத்தைச் சுளித்துத்தான் சொல்லி வருகின்றோம். அடுத்தது புளிப்பு. காட்டிலே புலியும் நாட்டிலே புளியும் கூடாது என்று அறிந்தோர் கட்டுரைப்பர். கேட்டுக்கேட்டு அலுத்துப் போகின்றோம். அதனைப் புளித்துப் போனதாகவே புனைந்துரைக்கின்றோம். உவர்ப்பும், துவரப்பும் மருந்துச்சுவை ஆகலாம். ஆனால் இனிப்பைப் போன்று விருந்துச்சுவை ஆகா.

காலதேச வர்த்தமானங்களைக் கருதிப் பார்த்தால் இனிப்புச் சுவைதான் அவைகளின் அரசியாகச் செங்கோலோச்சி வந்துள்ளதை அறியலாம். நாவின் சுவை தேர்ந்த நல்லறிஞர் இதனை அப்படியே இனிது சுவைத்து ஏற்றுக்கொள்வார்கள். ஏனையோர் காரசார வாதாடலாம். அவர்களுக்கு நம் இனிய அனுதாபம் உரித்தாகுக! அவர்களும் எமபோன்று இனிப்பின் உயர்தனிச் செம்மையை ஏற்றருளும் நன்னாள் விரைந்து வருவதாக!

திருவள்ளுவப் பெருந்தகையாருக்கு அக்கார அடிசில் போன்ற இனியசுவை உணவையே அன்னை வாசுகி வளமாகப் படைத்திருத்தல் வேண்டும். அவள் இறந்தபோது கண்கலங்கி நின்ற வள்ளுவர் கதறிச் சொன்னதென்ன? "அடிசிற் கினியாளே!" என்றார். அருமை மனையாள் அருத்திய இன்சுவை அடிசிலன்றோ நம் வள்ளுவக் குரிசிலைச் சிந்தைக்கினிய செவிக் கினிய வாய்க்கினிய குறள் அமுதை உலகினுக்கே படைத்தளிக்கச் செய்தது! வள்ளுவர் தம் இல்லாளின் அன்புடைமையைப் பாராட்டு

கின்றார். சொல் தவறாத பான்மையைப் போற்றுகின்றார். பதி சேவையை மதித்துப் பேணுகின்றார். ஆனால் இவை எல்லாம் அடிசிற்கு இனிமையின் பின்னே நிற்கும், பெற்றியனவே என்பது அவர் கருத்து. இனிய உணவு சமைக்கும் திறனை முன்வைத்துப் போற்றுங்காரணம் யாது என ஆய்வார்க்கு உண்மை புலனாகாமற் போகாது.

உணவின் சுவையை ஆறாகத்தான் பகுத்தனர் நம் முன்னோர்கள். அறிவின் சுவையையோ பதினொன்றாகப் பகுத்தனர். அவை குணம், அலங்காரம், இனிமை, நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்தம் எனக் கூறப்படும்.

நாவின் சுவை ஆறும் அறுசுவையே. ஆம் விரைவில் அற்றுப்போகும் சுவையே. அறிவின் சுவைகளான நவ சுவையோ பதினொன்பான் சுவையோ அற்றுப்போவதில்லை. வற்றிப்போவதில்லை. என்றும் யாண்டும் மனதைப் பற்றி மாறாமல் நிற்கும் தன்மைய.

கருத்தின் இனிமையில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்தவர்களைக் கேட்டுப்பார்த்தால் தெரியும். வடலூர் இராமலிங்கர் மாணிக்கவாசகர் பாநயத்தில் தோய்ந்தவர். உள்ளம் ஒன்றித் திருவாசகத்தைப் பாடியவர். திருவாசகத் தேனின் இனிமைப் பண்பு அவர் உள்ளத்தை ஈர்த்தது. அந்த இனிமை உவட்டவில்லை. தெவிட்டவில்லை. காரணம் பாட்டின் நளினமட்டு மல்ல; பாடியவரின் பரிபக்குவ நிலையுந்தான். மாணிக்கவாசகர் பாட்டை இராமலிங்கர் அவர் தம் செயல்மறந்து பாடும்போது கரும்புச் சாற்றிலே தேனைக் கலந்து, பாலைக் கலந்து, கனிச்சாறு கலந்து இவற்றோடு அவர் தம் ஊனும் கலந்து உயிருங் கலந்து உவட்டாமல் இனிக்கின்றதாம்.

*வான்கலந்த மாணிக்க வாசக!*
*நின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங் கால்*
*நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து*
*செழுங்கனித்தீஞ் சுவைகலந்து*
*ஊன்கலந்து உயிர்கலந்து*
*உவட்டாமல் இனிப்பதுவே.*

என்று வள்ளலார் உள்ளங் குழைந்து குழைந்து பாடுவதில் எத்துணை இன்பம் கலந்து கலந்து ஊற்றெடுக்கின்றது!

இராமலிங்கருக்கு இனிப்பென்றால் மிகவும் கொண்டாட்டம் போலும்! கடவுள் என்ற சொல்லினுக்கு, மனிதனின் வாக்கினுக்கும், மனதினுக்கும் எட்டாமல் உளங்கடந்து நிற்பவர் என்று பொருளுரைப்பவர் ஆன்றோர். இராமலிங்கர் கடவுளை உள்ளங் கடந்த ஒரு பரம் பொருளாக மட்டும் காணவில்லை. தித்திக்கும் தேன்சுவைப் பொருளாகவுங் கண்டார்.

*பார்த்தாலும் படித்தாலும் படிக்கப்*
*பக்கம் நின்று கேட்டாலும்*
*ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டி*
*அணைத்தாலும் இத்தனைக்கும் தித்திக்கும்.*

இனித்த சுவைப்பொருளாகக்கொண்டு இன்பம் எய்தினர்.

'பகுத்தறிவுப்' பாசறையில் ஒதுங்கிநிற்கும் சோற்றுப் பட்டாளத்தினருக்குக் கடவுள் புளித்துப்போனார். இனிக்குங் கடவுளிடத்து அவர்களுக்கு ஏனோ இந்த வர்மம்? கடவுள் என்ற சொல்லைக் கடம்+உள் என்று பிரிக்க வேண்டுமாம்! கடம்—சோற்றுப்பானையாம்! உள்—உள்ளேயிருக்கும் சோறும். கடவுள் சோற்றுப்பானையில் சோறும். சோற்றிலிருக்கிறதாம் சொர்க்க லோகம். எப்படி இருக்கின்றது இந்தப் பகுத்தறிவுச் சொற் பிறப்பு அகராதித்தனம்?

இராமலிங்கர் இறைவனை இன்சுவைக் கட்டியாகக் காண்கிறார். செலவானாலும் பரவாயில்லை. இந்த இராமலிங்கர் இனிப்பை நம் வீடுகளில் தாய்மார் செய்துபார்க்க வேண்டும். வாழை, மா, பலா என்ற முக்கனிகளைத் தனித் தனியாகப் பிழிந்து வடித்து ஒருபாத்திரத்தில் ஒன்றாகக் கூட்டுக. சர்க்கரையும், கற்கண்டுப் பொடியும் ஏராளமாகக் கலக்க, அப்புறம் தனித்தேனைத் தாராளமாக விடுக. பின்னர் பசும்பாலையும், தேங்காய்ப் பாலையும் சேர்க்க. இனிய பருப்பு இடியும் விரவுக. இனித்த நறும் நெய்யையும் இவற்றோடு அளைக. இவ்வளவும் ஆனதும் இக்கலவையை அடுப்பில் வைத்து இளஞ்சூடு காட்டி இறக்குக,

ஜாக்கிரதை! சூடு அதிகமானல் முறுகிச் சுவைகெட்டுப் போய்விடும். இப்படிப் பக்குவமாகச் செய்யப்பெற்ற பாகு எப்படி இருக்கின்றது. இதைவிட இனிப்பாக இருக்கின்ருர் இறைவன்.

*தனித்தனிமுக் கனிபிழிந்து*
*வடித்தொன்ருகக் கூட்டிச்*
*சர்க்கரையுங் கற்கண்டின்*
*பொடியுமிகக் கலந்தே*
*தனித்த நறுந்தேன் பெய்து*
*பசும்பாலுந் தெங்கின்*
*தனிப்பாலுஞ் சேர்த்துஒரு*
*தீம்பருப்பு இடியும்விரவி*
*இனித்தநறு நெய்அளைந்தே*
*இளஞ்சூட்டின் இறக்கி*
*எடுத்தசுவைக் கட்டியினும்*
*இனித்திடும் தெள்ளமுதே!*



# சாதாரண பார்க்கர் பேனு

**கேள்வி:** ஐயா, குயுக்தியாரே! கோயில் என்ருல் என்ன?

**பதில்:** கோயில் என்பது கோழைகளின் புகலிடம். காமுகர்களின் 'கார்னிவல்'. மத குருக்களின் தொழிற் சாலை. பயந்தவர்களின் பஜனை மடம்.

**கேள்வி:** இவ்வளவு அழகாக எப்படிப் பதில் எழுதுகிறீர்? குயுக்தியாரே!

**பதில்:** ஏன் சாதாரணமான ஒரு பார்க்கர் பேனுவினுல்தான்.

மேலே தீட்டப் பெற்றது வினு விடைத் தொகுதியில் ஒரு பகுதி. இது இலங்கையிலிருந்து வரும் சுதந்திரன் பத்திரிகையில் வெளியானது. கேட்டுப் பாருங்கள் என்ற தலைப்பின் கீழ் அமைந்தது. கேட்டவர் பலர். பதிலிறுத்தவர் 'குயுக்தியார்'. இந்த வினு விடைக்குப் படித்துப் பார்க்க வேண்டியதுமட்டுமல்ல. பரிசிலனை பண்ணிப் பார்க்க வேண்டியதும்கூட.

கேள்வி மணியான கேள்வி. ஆணித்தரமான கேள்வி. வாழ்வுக்கு வழிதேரும் கேள்வி. பதிலில்தான் ஒரு அழகும் இல்லை, அந்தஸ்தும் இல்லை. குயுக்தி என்ற பெயர் பொருந்திய பெயர். குறுகிய புத்தி தோணிக்கிறதேயன்றி விசால திருஷ்டி தென்படவில்லை. அடுக்குச் சொல் அலங்காரம் இருக்கின்றது. எதுகை மோனை நடமிடுகின்றது. உருவக அணிக்கும் குறைவில்லை. ஆனால் விவேகமான விளக்கம் இல்லை. ஒரு சாதாரணமான பவுண்டன் பேனு அழகான பதில் சொல்லும் என்று பரிபூரண நம்பிக்கையுடன் அதனை அநாயாசமாக ஓட்டுகின்றவரிடம் இந்தப் பதிலும் கிடைக்கும், இதைவிட மட்டமான பதிலும் கிடைக்கும். இதில் வியப்பிற்கிடமில்லை.

*நிலைபெறுமா றெண்ணுதியேல்*
*நெஞ்சே நீவா*
*நித்தமும் எம்பிரான்*
*கோவில் புக்குப்*
*புலர்வதன்முன் அலகிட்டு*
*மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப்*
*புகழ்ந்து பாடி*

இறைவனை வணங்கவேண்டும் என்கிறார் திருநாவுக்கரசர். அப்பர் சுவாமிகள் போன்றோரின் நல்வாக்குகளையெல்லாம் நினைத்துப் பார்க்கவும் நினைத்து நினைத்து நேரிய பொருள் அறியவும் தோழர் குயுக்தியாருக்கு நேரமில்லை போலும்! நறுக்கத் தறித்தமாதிரி குறுக்கிச் சொல்லி மகிழ்கின்றார் கோவிலைக் கோழைகளின் புகலிடம் என்று. பாவம்! அவர் என்ன பண்ணுவார். அவருடைய சாதாரண பார்க்கர் பேனு அவரை அந்த அழகில் எழுதச் செய்கின்றது.

கோவில் காமுகர்களின் கார்னிவலாம்! கோரக் கொலைகள் காட்சிப் பொருளாகக் களிநடம் புரிந்த பழங் கார்னிவலைக் குறித்தாரோ? அன்றிப் பாட்டும் கூத்தும் சூதும் சொக்கட்டான் ஆட்டமும் மலிந்த புதுக் கார்னிவலைக் குறித்தாரோ? அட அடா! இது என்ன அற்புதமான உருவகம் என்று அவருடைய சாதாரண பார்க்கர் பேறு சிந்தித்திருக்கும் அதற்குச் சிந்தும் திறத்தோடும் சிந்திக்கும் ஆற்றலும் சேர்ந்திருந்தால். கார்னிவலாம் கார்னிவல். நல்ல மனிதன் இக்கூற்றை அபத்தக் களஞ்சியம் என்று துணிந்து சொல்லுவான். கோவிலுக்குப் போகிறவர்கள் காமுகர்களா? காமக் கருத்துடன்தான் அங்கே புறப்படுகிறார்களா? கடவுள் வழிபாட்டில் தோன்றுவது காம எண்ணமா? சிந்தை நியமத்தோடு செல்லும் இடம் தேவாலயம். தூய எண்ணத்தோடு தொழுகை நிகழும் இடம் தேவாலயம். இறைவனின் திருக்கோயிலில் உண்மை அன்பர்களின் உள ஒருமைப்பாட்டைக் காண்பதுண்டு. ஒரு நாமம் ஓர் உருவம் இல்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டுவது கேட்பதுண்டு. கடவுளிடத்துக்காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குவதைக் காண்பதுண்டு. பாவிகள் தம் பாவங்களை எண்ணிக் கலங்கிநிற்கக் காண்பதுண்டு. தொழுவரும் அடியவரான இளையரும் முதியரும் இறைவனோடு மழலையாடுவதைக் கேட்பதுண்டு. ஆராலும் அளவிடுதற்கு அரியவனை ஒரு கரத்து நீராலும் மலராலும் நெஞ்சுருகப் பண்ணும் நிகழ்ச்சியைப் பார்ப்பதுண்டு. ஆனால் கோவிலைக் காமுகர்களின் கார்னிவலாகக் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. ஆனால் திருவாளர் குயுக்தியார் மட்டும் அவ்வாறு காண முனைகின்றார். எப்படிக் காண்பாரோ நாம் அறியோம் பராபரமே!

கோவில் மதக் குருக்களின் தொழிற்சாலை. நிரம்ப சரி. குருக்களைச் சோம்பேறி மடத்தில் ஒதுக்கிவிடவில்லை. கருணை காட்டித் தொழிற்சாலையில்தான் வைத்திருக்கின்றார். அந்தமட்டில் லாபமே. குருக்கள் இருக்கும் கோவில் இடம் நல்ல இடம்தான். அதுவும் நல்ல தொழிற்சாலை தான். குயுக்தியார் இனத்தவர் விரும்பலாம் அல்லது வெறுக்கலாம். எவருடைய விருப்பையும் வெறுப்பையும் பொருட்படுத்தாத வகையில் கோவிலாகிய தொழிற்

சாலையில் குருக்களாகிய தொழில் நிபுணர்கள் இன்றியமை யாத அலுவலைத்தான் இயற்றி வருகின்றார்கள். கடவுள் அன்பிலே மக்களைப் பக்குவப்படுத்துவதே அவர்கள் அன் றாடம் செய்துவரும் அன்புத் திருப்பணி. தெய்வ பக்தி வளர்வதால் குடிமூழ்கிப் போவதுபோல கூப்பாடு போடு கிறார்கள் குயுக்திக் கூட்டத்தார். ஆண்டவன் பக்தியால் அபாயமில்லை. அதனால் சித்தம் தெளியும். செய்கை அனைத் திலும் செம்மை பிறந்திடும். வீரமுண்டாகும். தீரமுண்டா கும். வேறு வேறு பல விழுச் செல்வம் பெருகும். பயப் படாதவர்களின் தனிப்பெரும் பிரதிநிதியாக விளங்கா நின்ற பேறுவீரர் குயுக்தியார் கோவிலைப் பயந்தவர்களின் பஜனை மடம் ஆக்கிவிட்டார். பஜனை மடமாக்கியதில் தப் பில்லை. பஜனையால் உள்ளத்திற்கும் நலம் உண்டு. உடம் பிற்கும் நலம் உண்டு. பக்தர்கள் சேர்ந்து பாடி மகிழ்வது எவ்வளவு வரவேற்கத் தகுந்த திருந்திய செய்கை. ஆனால் பயந்தவர்களின் பஜனை மடம் என்பதைத்தான் அறிஞர் ஏற்றுக்கொள்ளார். பயந்தவர் யார்? எதைக்கண்டு பயந் தார்? ஏன் பயந்தார்? இடம் பொருள் ஏவல் நோக்கி அல்லவா? பயந்தவர் யார் பயப்படாதவர் யார் என்பது அறுதியிடப் பெறவேண்டும். புலி வருவதைக் கண்டு "இந்தப் புலிக்குப் பயந்தவர்கள் என்மீது படுத்துக்கொள் ளுங்கள்" என்று சூழ நின்றவரை நோக்கி வீர முழக்கஞ் செய்து பதுங்கி வீழ்ந்தவன் பயந்தவனா? அடுத்து நின்ற ஆண்பிள்ளைச் சிங்கங்கள் பயந்தவர்களா?

தீர ஆராயாது அலசிப் பாராது, சர்வ சாதாரணமான பார்க்கர் பேறு கோவிலைப் பயந்தவர்களின் பஜனை மடம் என்று சர்வ சாதாரணமாகத் தீர்ப்புக் கூறிவிட்டது.

பகுத்தறிவை முடமாக்கி, பார்க்கர் பேறு சகிதம் நொண்டித் திரிபவரிடம் வேறென்னதான் எதிர்பார்க்க முடியும்?



# இலட்சிய உலகம்

புதியதோர் உலகு செய்வோம் என்று புத்துணர்ச்சிப் பாட்டுப் பாடுகின்றார்கள் புரட்சிக் கவிஞர்கள். உலகத்தை எப்படியும் சீர்திருத்தியே ஆகவேண்டும் என்று அறை கூவுகின்றார்கள், ஆவேசம் கொண்ட சீர்திருத்தச் செம்மல் கள். உலகம் உலகமாகத்தான் இருக்கும். உலகையாவது திருத்துவதாவது என்கிறார்கள் காரியவாதிகள். உன்னைத் திருத்து, உலகம் தன்னைத் திருத்தும் என்கிறார்கள் மெய் யுணர்வுடைய இலட்சிய வாதிகள்.

உலகம் பலவிதம். அதில் இலட்சிய உலகம் ஒருவிதம். ஒருவிதம் மட்டுமன்று. அதுவே ஒப்பற்ற தனிவிதம். ஏன்? உலகம் என்பது உயர்ந்தோரைப் பொறுத்தது. கல்வி அறிவு ஒழுக்கங்களால் நிறைந்த சான்றோரே இலட்சிய உலகை இயற்றுந் திறனுடையவர்கள். ஏனை யவர் வெந்ததைத் தின்று விதி வந்தால் சாவோம் என்னும் போக்குடையவர்கள். குறிக்கோளும் கோட்பாடும் இல் லாத வாழ்க்கையினர். பொய்யும் புனைசுருட்டும், சூதும் வாதும், கள்ளமும் கபடமும், டம்பமும் முழக்கமும்தாம் நடைமுறை உலகியல் என்று கண்டுபிடித்துக் கொண் டவர்கள் போல வாழ்பவர்கள். உலகம் என்றால் இப் படித்தான் இருக்கும், பத்தோடு பதினொன்று அத்தோடு நானும் ஒன்று என்று மனத்தைச் சாந்தி செய்துகொண்டு கண்மூடி வழக்கங்களைக் காத்து வாழ்பவர்கள். இந்த வகையார் எல்லாம் இலட்சிய உலக வட்டாரத்தோடு ஒட்டாதார்கள்.

ஞானிகள் உலகத்தை இலட்சியக் கண்கொண்டு பார்க்கிறார்கள். அது அவர்களுக்கு "வடுவிலா வையம்" இலட்சிய உலகிலே குற்றம் இல்லை; குறைவில்லை. எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே அங்கே இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை. உலகை மாசுபடுத்துபவன் குற்றவாளியான மனிதன். அவன் தன் சுயநலத்தால், அழுக்காற்றால், அவாவால், வெகுளியால், இன்னாச் சொல்லால், பொல்லாத குணத்தால் பொறுப்

பற்றதனத்தால் இன்னோரன்ன பிறவற்றால் இருநீர் வியனுலகை எவ்வளவு கோரப்படுத்துகின்றான்! எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவேயல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே என்று எல்லோருமே நினைந்து செயலாற்றத் தொடங்கினால் இந்த உலகம் இலட்சிய உலகமாகும். இன்பத்தின் உறைவிடமாகும் என்பதில் என்ன தடை? உலகநிலை இன்று கலக நிலையாகக் காரணம் என்ன? அன்பின் இலட்சியத்தை மறந்ததன்றோ காரணம்? நான் எனது என்ற அழுந்திய பற்றன்றோ காரணம்? "எங்கள் நாட்டுக்கெந்த நாடு ஈடு" என்ற அதிதமான நாட்டுப் பற்றன்றோ காரணம்? நாட்டுப் பற்றையும் மிஞ்சி ஓங்கும் நகரப் பற்றன்றோ காரணம்? அர்த்த சாரமற்ற கோஷங்களால் வளர்க்கப்படும் நிறமொழி இனவேற்றுமைகளன்றோ காரணம்?

உலகம் ஒரு குடும்பம். யாதும் ஊர். யாவரும் கேளிர். யாதானும் ஊராம் நாடாம். ஒன்றே குலம். ஒருவனே தேவன். இந்த உயர்ந்த இலட்சியங்களன்றோ உலக நலத்திற்கு உறுதுணை செய்து உய்விக்கும் இலட்சியங்கள். இந்த இலட்சிய வாழ்வு நடைமுறையில் அமையாத வரையில் "இருட்டறையில் உள்ளதடா உலகம்!" என்ற ஏக்கக் குரல் தொனித்தே தீரும்!

உலகியலிலே தோல்வி அடைந்தோர் துன்பப்பட்டோர் "என்ன உலகமடா இது" என்று மூச்சடைக்கின்றனர். வெற்றி பெற்றோர் விரும்பிய இன்பம் பெற்றோர் "இந்த இன்பமே சொந்தமதானால் வானுலகமும் வேண்டாம்" என்று இறுமாந்து பேசுகின்றார்கள். "தீங்கிலா இடமே வேண்டில் சேணுலகு எய்தல் வேண்டும்" என்று தெளிந்த புலவர்கள் தெரிந்துரைக்கின்றார்கள்.

உலகம் என்றால் சுகமும் உண்டு; துக்கமும் உண்டு. வாழ்வும் உண்டு; தாழ்வும் உண்டு. கூட்டமும் உண்டு; பிரிவும் உண்டு. செல்வமும் உண்டு; வறுமையும் உண்டு. இன்பத்தையும் துன்பத்தையும் அடுத்தடுத்துக் காண்கின்றோம். இதனாலே உலகம் இன்னாதது என்று முடிவுகட்டுவது ஆராய்ச்சியில்லாத தீர்மானம். நிதானப் போக்குடையவர் உலகியலில் என்றும் எங்கும் இனிமையையே காண்பர்.

ஒரே வீதியில் ஒரு வீட்டில் பிணப்பறை அதிர்கின்றது. மற்ருெரு வீட்டில் மணமுரசு மங்கலமாக ஒலிக்கின்றது. ஒரு இல்லத்தில் பிரிந்த தலைவன் வீடுவந்து சேர்ந்தாஞக இல்லத் தலைவி மகிழ்ச்சிப் பெருக்கால் மலர் சூடித் தன்னை அணி செய்து கொள்கிருள். இன்ருெரு இல்லத்தில் கணவனைப் பிரிந்திருக்கும் காரிகை கண்ணீர் வடித்துக் கலங்கி இருக்கிருள். இப்படிப்பட்ட இருவேறு உலகநிலை இன்ஞமையுடையதுதான் என்று சொல்லத் தோன்றுகின்றது. ஆஞல் ஆய்ந்தோய்ந்து பேசும் பேச்சல்ல. உலக இயல்பை உணர்ந்த இலட்சியவாதிகள் எங்கும் என்றும் இனிமையையே காண்பார்கள்.

இக்கருத்தினைப் புலப்படுத்தும் புறநாஞற்றுக் கவின் காட்சிக் கவிதை வருமாறு :

*ஓரில் நெய்தல் கறங்க ஓரில்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப*
*புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப*

.................................................................

*இன்ஞதம்ம இவ்வுலகம்!*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந்தோரே!*



# இலட்சிய நாடு

எந்த நாடு எங்கள் நாட்டுக்கிடு பேரின்ப ஞானவீடு என்று பாரும் நீரும் அதிரப் பரணி பாடுகின்றோம். "பிறந்த பொன்னாடு நற்றவ வானிலும் நனி சிறந்தது" என்றும் "எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே" என்றும் உணர்ச்சியின் சிகரத்திலிருந்து ஓங்கி உரைத்தார் நம் தேசீயக் கவிஞர் பாரதியார். சொந்த நாட்டுணர்ச்சியை நம் சிந்தைக்கினிய உரிமைச் செல்வமாகப் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு நமது நாவலரும் பாவலரும் வழங்கியுள்ள தீப்பொறி பரக்கும் அனல் வாசகங்கள் பெரும்பாலும் நம்முணர்ச்சிக்கே உரம் ஊட்டுவனவாக அமைந்துள்ளன.

காரியார்த்த அறிவியலின் அடிப்படையில் இலட்சிய நாடு அமைத்துக் கொடுத்த கலைஞானி திருவள்ளுவர். அவர் கண்ட இலட்சிய நாடு உணர்ச்சியில் உருவானதல்ல. உருவெளித் தோற்றமான பேய்த்தேரல்ல. நடைமுறையில் செயல் முறையில் இயங்கக்கூடிய செல்வநாடு.

நாடு என்ற உடனே எல்லைக்கோட்டைப்பற்றி எண்ணுவாருண்டு. தலைநகரைப்பற்றித் தர்க்கிப்பாருண்டு. ஆளவந்தாரைப்பற்றி நீள நினைப்பாருண்டு. தொல்காப்பியரும், திருவள்ளுவரும் இன்னோரன்ன மூதறிஞர் தொல்லைதரும் எல்லையைப்பற்றிக் கவலைகொண்டதாகக் காணோம். தலைநகரை ஒரு பிரச்னை யாக்கியதாகவும் தெரியவில்லை. நாடாள்வோரைப் பற்றியும் அத்துணை பிரமாதப் படுத்திக் கொண்டதாகவும் தோன்றவில்லை.

எதுநாடு என்ற வினவிற்கு விடை இறுப்பார்போல முயன்று தேடாமலேதரும் வளமுடையது நாடு என்கிறார் வள்ளுவர். "நாடு என்ப நாடா வளத்தன" இதுவும் அவர் தாமாக அறுதியிட்டுச் சொன்ன கருத்தல்லவாம். அவருக்கு முன்னிருந்த பல அறிஞர்கள் அப்படித்தான்'

சொல்லி வைத்திருக்கிறார்களாம். ஆதலின் "என்பார்கள்' என்ற முடிவு காட்டி "என்ப" என்கிறார்.

உணவெங்கே? உடை எங்கே? உடையுணவுத் தேவைகளுக்கு ஆதாரமான மழை எங்கே? என்று மக்கள் கீழும் மேலும் அங்கும் இங்கும் பார்த்துப் பார்த்துக் காத்திருந்தால் அந்த மக்களைக் கொண்ட நாடு நாடல்ல. இதை வற்புறுத்தவே நாடல்ல நாட வளந்தரு நாடு எனவும் உரைத்தார். பார்க்குமிடமெல்லாம் நீக்கமற வளங்கள் பாலித்திருக்கும் நாடே இலட்சிய நாடு.

குன்றாத விளையுளும் குறையாத பெருவளமும் இருந்தால் போதுமா? இவற்றைப் பகுத்து அநுபவிக்கும் பண்புடைய நன் மக்கள் வேண்டும். இவர்களுக்கு வழிகாட்டும் தவத்துறை முற்றிய "தக்கார்" வேண்டும். இயற்கைப் பெருவளத்தோடு செயற்கைச் செழுமையும் கொழிக்க ஆவன மேற்கொள்ளும் "தாழ்விலாச் செல்வர்" வேண்டும். சீர்மலிவளங்களைத் தவத்தால் பேணும் முனிவரும் தம்முயற்சியால் பெருக்கும் செல்வரும் சேர்ந்து வாழும் சிறந்த நாடே இலட்சிய நாடு.

எந்த நாட்டையும் கெடுத்துக் குட்டிச் சுவராக்க முனைந்தெழும் அரக்கர் மூவர். இவர் பசியார் பிணியார் பகையார். இவரை நெருங்கவொட்டாமல் அறப்போர் தொடுத்து உலையா முயற்சியால் நிலைபெற நிற்பது இலட்சிய நாடு. இலக்கிய நாட்டின் செல்வர்கள் கேடில்லா விழுச்செல்வர்கள். ஆகவே படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும் உடைப்பெருஞ் செல்வர்கள். அந் நாட்டு மக்கள் வெய்துண்ட வியர்ப்பல்லது செய்தொழிலால் வியர்ப்பறியாத மக்கள். அவர்கள் பசி அரக்கனை பெரு விளைவாலும் பகுத்துண்ணும் பாங்காலும் புறமுதுகிடச் செய்வர். பிணி அரக்கனை உடல் உரத்தால் ஓட்டுவர். பகை அரக்கனை பண்பால் வெல்வர்.

இந்த மூன்றரக்கர்களையும் அண்ட விடாமல் அகல விரட்டி அப்புறம் வெற்றி எட்டுத் திக்கும் எட்ட முரசு கொட்டும் நாடே இலட்சிய நாடு.

இலட்சிய நாட்டில் உறுபசியும் ஓவாப்பிணியும் செறு பகையும் சேரவே சேராதென்பதல்ல. சேரவொண்ணுது தடுப்பதை அந்நாட்டின் அறிவுடைப் பெருமக்கள் தங்கள் தலையாய கடமையாகக் கொள்வர். இலட்சிய நாட்டை எதிர்நோக்கித் தங்கள் இதய அஞ்சலியை இடையருது எழுப்பியவண்ணமாக இருப்பர். பசியும் பிணியும் பகையும் தீர்ந்ததாக, வரகவிஞரின் கீதாஞ்சலியில் இலட்சிய நாட்டன்பர்களின் இதய ஒலி எதிர் ஒலிக்கக் கேட்போம்.

*எங்கே மனம் பயமற்று விளங்குகின்றதோ*
*எங்கே சிரம் நேர்மையுடன் நிமிர்கின்றதோ*
*எங்கே அறிவு சுதந்திரத்துடன் மிளிர்கின்றதோ*
*எங்கே குறுகிய சாதி இனப் பூசல்களால் உலகம்*
*சிதையாமல் உருப்பெற்றிருக்கின்றதோ*
*எங்கே உண்மையின் ஆழத்திலிருந்து சொற்கள்*
*உதயமாகின்றதோ*
*எங்கே தளரா முயற்சி பரிபூரணத்தை நோக்கிக்*
*கரங்களைப் பரப்புகின்றதோ*
*எங்கே பகுத்தறிவுத் தெள்ளாறு மாண்டொழிந்த*
*பழக்கங்களான பயங்கரப் பாலைமணலில் பாயாது*
*மீள்கின்றதோ*
*எங்கே விரிந்த சிந்தையில் செயலில் எனது உள்*
*ளத்தை உன் அருள் இழுத்துச் செல்கின்றதோ*
*அங்கே அந்த சுதந்திர சுவர்க்கத்தில்*
*என் அப்பனே எந்நாடு விழித்தெழுவதாக!*



# நிற்க அதற்குத் தக

கல்வியும் வாழ்வும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையன. இதனை எந்நாட்டு நல்லறிஞரும் முன் னுட்டி மொழிவர். கல்விக்கும் வாழ்வுக்கும் இருக்க வேண்டிய இயைபை உய்த்துணர்ந்து வாழும் உத்தமரே உண்மைக் கலைவாணர். மனித வாழ்வு புனித வாழ்வாக வேண்டுமானால் கல்வியும் வாழ்வும் கலந்துறவாட வேண் டும். தேர்வை நோக்கமாகக் கொண்டு கற்பது கல்வி யல்ல. வாழ்வை நோக்கமாகக்கொண்டு கற்பதே கல்வி. பட்டமல்ல படிப்பின் பரிசு நல்லொழுக்கச் சட்டமே அதன் நல்ல வெகுமதி. பதவியைக் குறித்துப் பயில்வதை விடுத்து நல்வாழ்விற்கு உதவியை நோக்கிப் பயில்வதே பயிற்சி.

ஆசிரியர் திருவள்ளுவர் "கற்க கசடறக் கற்பவை" என்று மிக நுட்பமாகக் கருதிப் பார்த்து உறுதிதரும் உபதேசத்தை அறுதியிட்டுச் செய்கிறார். எவை கற்க? கற்பவை கற்க. எப்படிக் கற்க? கசடறக் கற்க. கண்டவை கற்றுப் பண்டிதன் ஆகலாம். ஆனால் பண் புடையவன் ஆதல் ஒல்லாது. கல்வியில் கொள்ள வேண்டு வனவும் உண்டு. தள்ள வேண்டுவனவும் உண்டு. கற்க வேண்டுவனவும் உண்டு. கருத வேண்டாதனவும் உண்டு. ஆகவேதான் கற்பவை கற்க என்று விழிப்புடன் விளம்பு கின்றார்.

எவை கற்கத் தகுந்தவை கற்கத் தகாதவை என்று தன் மனதே சான்றாக அறிந்துகொள்ளக் கூடாதே போனால் அறிந்தோர்பால் கேட்டுத் தெரிந்து கொள்வது கஷ்டமல்ல. எதையும் கற்பது என்பதுதான் ஆபத்தான வழி. எதைக் கற்பது என்று தெரிந்து கற்பதே சான்றோர் காட்டும் செவ்விய வழி.

*"அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய*
*நூல்இன்றிக் கோட்டிக் கொளல்"*
*விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்*
*கற்றாரோடு ஏனை யவர்.*

வள்ளுவர் 'நிரம்பிய நூல்' என்றும் 'இலங்கு நூல்' என்றும் இலக்கணஞ் சுட்டி இயம்புதல் காண்க. அறிவு நிரம்புவதற்குக் காரணமான நூல் என்பதும் அறிவு விளங்குவதற்குக் காரணமான நூல் என்பதும் இத்தொடர்களின் பொருள். நிறைவும் விளக்கமும் நூல் முகத்தின் இருவிழிகள். அறிஞர் அவைக்களம் அஞ்சாது செல்லவும் மனிதப் பண்புடன் மாண்புற வாழவும் வகை செய்யும் சீர்சான்ற துணை விழிகள். நிறைந்த நூலுக்கு மாறுன குறைந்த நூலும் இலங்கு நூலுக்கு எதிரான கலங்கு நூலும் எங்ஙனம் அறிவை வளர்க்கும்? எப்படி அறிவை விளக்கும்? அத்தகைய குருட்டு நூலும் இருட்டு நூலும் குறைவையும் குழப்பத்தையுமே விளைவிக்கும்.

நிரம்பிய நூல்கள் தாம், விளங்கிய நூல்கள் தாம், எனினும் அவற்றைக் கற்பார் முறையாகப் பயிலாவிடில் பயன் யாது? எனவேதான் ஆசிரியர் கசடறக் கற்றல் வேண்டும் என்ருர். கசடு அற என்ற இடத்து நூலியலை உணர்வதில் வழுவின்மையோடு அதனைத் தம் வாழ்வியலில் பொருத்துதலிலும் பழுதின்மையைக் குறித்தாராகக் கொள்ள வேண்டும். நூற் பொருளைக் குற்றமின்றிக் கற்றல் ஒன்று. மனத்திலேயுள்ள கசடும் அறும்படியாகக் கற்றல் அதன் தொடர்பாய் ஆகவேண்டிய பிறிதொன்று.

கற்பவை கற்றேன் கசடு அற்றேன் அவற்ருேடு எல்லாம் முற்றும் என்று ஓட்டம் எடுக்காமல் நிற்க என்ருர். கல்வி திறமை தருகின்றது. தகைமையும் தரல் வேண்டும். கல்லூரியில் சேருமுன் திறமை தகுதிபற்றி வாய்ப்பறை சாற்றுவார் இந்நாளில் பலப் பலர். கல்வி முற்றியபின் திறமை தகுதியை வற்புறுத்துகின்றவர் வள்ளுவர்.

"நிற்க அதற்குத் தக". நிற்க என்ற சொல் எத்துணை பொருள் ஆற்றல் படைத்ததாக முறப்பட்டு வீறுகொண்டு நிற்கிறது என்பதை உணர்க. 'அமைக,' 'இருக்க,' 'நடக்க,' என்ஞது 'நிற்க' என்ருர். 'அதற்குத் தக நிற்க' என்ருல் ஒருவேளை 'நிற்க' ஆற்றல் இல்லாது போய்விடக் கூடும். எனவே 'நிற்க அதற்குத் தக' என்று செயலை முன்னிறுத்திச் சொன்ஞர். சில கடிதங்களில் கட்டுரைகளில்

சொற்பொழிவுகளில் நாம் அடுத்தடுத்துச் சந்திக்கின்ற, நின்று பயனில்லாத, 'நிற்க' வின் இனத்தைச் சேர்ந்ததல்ல. இந்த "நிற்க". கற்றபடி நிற்றல் எவ்விடத்தும் எளிதாக இராது. கற்றறிந்த கடமையில் எங்கும் என்றும் சலஞ் சாதித்து நிற்க, ஆடாமல் அசையாமல் ஓடாமல் ஒதுங்காமல் உறுதியுடன் நிற்க என்பதை நினைவுறுத்தவே "நிற்க" நிலையாய் நிற்கின்றது.

உள்ளத்தால் பொய்யாதொழுகிய சத்தியப் பிரியன் அரிச்சந்திரனும் அவனது உத்தம மனைவி சந்திரமதியும் பதியை இழந்தார்கள். பாலனை இழந்தார்கள். நேர்மையை இழக்கவில்லை. இழக்கும்படியான இடுக்கண் ஏற்பட்டது. கலைத்துறை முற்றிய விசுவாமித்திரப் பெரு முனிவரே " எனக்கு நீ முன்னம் தந்த நாடு யான் தந்திலேன் எனும் மொழி உரைத்து உந்தன் நாடும் இவ்வுயிர்களும் பெறுக" என்று உபாயஞ் சொன்னார். அப்போது அரிச்சந்திரனும் அவனுடைய வாழ்க்கைத் துணைவியும் என்ன பதில் சொன்னார்கள் ?

"அடிகாள்! எங்கள் சொந்த நலங்கோரி வாய்மையின் பெருநலம் இழப்போமோ? இவ்வுடம்பு நிலையற்றது; இழிவுற்றது. நிலையிலா யாக்கையை நிலையென நினைந்து மதிமயங்கோம். உயிரினுஞ்சிறந்த உண்மைப் பிறழ்வதற்கு ஒருப்படோம். இவைகிடக்க...நீவிர் ஞானம் தெரிந்த மேன்மையுடையீர்! நிரட்சர குட்சிகள், எழுதப் படிக்கத் தெரியாதவர், தற்குறிகள், பாமரர் இந்தவிதமான ஒரு யோசனை தந்தாலும் பரவாயில்லை. கலையுணர்ந்த நீவிர் இப்படி கழறலாமோ? நீர் கற்ற கல்விக்கு இது அழகாகுமோ?" என்றனர்.

இது கணவனும் மனைவியும் ஒருமொழியாக உரைத்த வீர வாசகம். முனிவர் வாயிழந்து மறைந்தேகச் செய்த மந்திர வாசகம். "நிற்க அதற்குத்தக" என்ற நீதி உரைக்கு உயிரூட்டும் இலக்கிய வாசகம்.

*"புலைய னும்விரும் பாவிந்தப் புன்புலால் யாக்கை*
*நிலையெ னமருண் டுயிரினும் நெடிதுறச் சிறந்தே*
*தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்*
*கலையு ணர்ந்தநீ எமக்கிது கழறுவ தழகோ ?"*

# சான்றோர்

உளநலன் சிறந்தும் குணநலன் நிறைந்தும் செந்தன்மை கொண்டொழுகும் சிலரை உலகம் பாராட்டுகின்றது, சீராட்டுகின்றது. வையத்து வாழ்வாங்கு வாழ்வதால் யாவர்க்கும் சான்றோராகத் தோன்றுபவர் எடுத்துக்காட்டாக இலங்குபவர் உதாரண புருஷராக ஒளிர்பவர் சான்றோர். குழந்தையின் பிஞ்சுமொழி கேட்டு மகிழ்கிறாள் அன்னை. இது ஒரு தரமான மகிழ்ச்சி. அவளே தன் மகனைச் சான்றோன் என்று கேட்ட காலத்து ஈன்ற பொழுதினும் இனிதுவக்கின்றாள். இதுவோ ஈடு இணையற்ற கழி பேருவகை. தம் மக்களின் சழக்குரை முழக்கம் கேட்டும் உலகத்தாய் களிப்படைகின்றாள். தம் மக்கள் சான்றோர் என்று கண்டுகொண்ட இடத்து உலக அன்னை எத்துணை பெருமகிழ்ச்சி உறுகின்றாள்! இதுவன்றோ உலக அன்னையின் ஒரு பெரும் உவப்பு!

சான்றோரை ஒரு ஸ்தாபனமாகக் கண்டார் திருவள்ளுவர். சான்றோர் ஒரு தனி மனிதர் மட்டும் அல்லர். அவர் ஒரு தனிப்பெரும மன்றம் என்பது அவர் கருத்து. சான்றோர் உலக அமைதி காக்கும் நிரந்தர பொதுநல மன்றம். சான்றாண்மை வழியே சுபீட்சம் சுரக்கும் சற்குணமன்றம். வன்மைவாய்ந்த ஐந்து தூண்கள் இம்மன்றத்தில் அழகொழுக விளங்குகின்றன. அவை அன்பு நாணம் உபகாரம் இரக்கம் வாய்மை என்னும் உறுதித் தூண்கள். அன்பு என்னும் உயிர் ஒளிவீசும் அகத்தில் பகை இருக்க இடமேது? நாணம் இருக்கும் இடத்தில் நேர்மையற்றதனம் எக்கோணத்தில் இருக்கமுடியும்? இரக்கம் நிறைந்த இடத்தில் அரக்கத்தன்மைக்கு அலுவல் உண்டோ? வாய்மையின் வன்மையை எந்தத் தீமை எதிர்த்து நிற்க இயலும்? தளர்ந்து வளையாத இருப்பனைய இப்பெருந் தூண்கள் தாங்கும் சான்றோர் மன்றம் அன்பின் ஆலயம். நாணத்தின் நல்லகம். உபகாரம் உறைமனை. இரக்கத்தின் இல்லம். வாய்மை வாழிடம். இதில் வாழும் ஆன்றோர் வையகத்தை வாழவைக்கும் சான்றோர். சான்றோர் இல்லையென்றால் ஜகதலம் என்னாகும்? பயங்கரமான

கேள்வி! சான்றோர் இல்லாத உலகத்தைத் திருவள்ளுவர் எண்ணிப் பார்க்கவும் இசையவில்லை. இதை அடுத்த நிலை யில் ஒரு கேள்வி எழுகின்றது. சான்றோர் சான்றாண்மை குன்றினால் உலகம் என்னாகும் என்ற கேள்வியைத்தான் அவர் கேட்கின்றார். அதற்கு விடையும் இறுக்கின்றார். சான்றோரிடத்திலமைந்த சால்பு என்னும் நிறைந்த பண்பு ஓரளவு குறைந்தாலே போதுமாம். இவ்வுலகம் தன் பாரம் தாங்காது போய்விடுமாம். "சான்றவர் சாற்றாண்மை குன் றின் இருநிலந்தான் தாங்காது மன்னோ பொறை". (990)

"தம்பி, குடியாதே! மதுபானஞ் செய்வது மதி கேடான செயல். மது உண்டுதான் ஆகவேண்டும் என்ற எண்ணம் வலுக்கின்றதா? அது இல்லாமல் தீராது என்று தீர்மானிக்கப்போகின்றாயா? சற்றுப்பொறு...... அவசரப் படாதே...... சான்றோரால் நீ மதிக்கப்படவேண்டாம் என்று தீர்மானித்துவிட்டாயா? அவர்தம் ஆசியும் நல்லுற வும் அவசியமில்லை என்று முடிவுகட்டி விட்டாயா? அப்படியானால் நீ மது உண்ணவும் தீர்மானிக்கலாம்." இது வள்ளுவர் உபதேசம். "உண்ணற்க கள்ளை; உணில் உண்க சான்றோரால் எண்ணப்பட வேண்டாதார்". (922) சான்றோரால் மதிக்கப்பெறவேண்டும் என்ற எண்ணம் எந்தமனிதனும் போற்றி வாழும் குறிக்கோள் எண்ணம். அந்த எண்ணத்திற்குத்தான் மதுவை ஒழித்து மதியை வளர்க்கும் ஆற்றல் உண்டு என்றால் சான்றோர்களன்றோ சமுதாய நலங்காக்கும் பெருங்காவலர்?

கிள்ளி வளவனை ஆலத்தூர் கிழார் வாழ்த்த வேண்டும். செய்ந்நன்றி அறிந்தவராக அவன் செயல் திறத்தைப் போற்ற வேண்டும். அவன் கொடுத்த வரகரிசிச் சோறு-பாலில் பெய்து சமைத்த வளமான சோறு. தேன் கலந்து ஊட்டிய தீஞ்சுவைச் சோறு. குட்டிமுயலின் கொழுத்த சூட்டிறைச்சியுடன் கொடுத்த செஞ்சோறு, இதை மகிழ் வுணர்ச்சியோடு நினைக்கின்றான் அவ்வளவன். பாணர்க் கீந்த பெருஞ் செல்வங்கள் அவன் கண் முன்னே வந்து நிற்கின்றன. அவன் கொடைப் பெருமையை எச்சொல் லால் சொல்வது? எப்படிப் போற்றுவது? அவனைப் பாட வில்லை என்றால் அது செய்ந்நன்றி கொன்றதாகும். இக்

கொலைக் கொடுமையைக் காண அஞ்சி செங்கதிரோனும் வெளிப்படான். தகுந்தபடி வாழ்த்துவது எப்படி என்று இன்னமுந்தான் திண்டாடுகின்றார். பளிச்சென்று ஒரு அருங்கருத்து அவர்தம் கவியுள்ளத்தில் ஒளிவிடுகின்றது. சான்றோர் செய்த நன்று ஒன்றுண்டாயின்...... "மாமழை பொழிந்த நுண்பகல துளியினும் வாழிய பலவே" என்று வாழ்த்துரை இதய அடித்தளத்திலிருந்து எழுகின்றது. ஆம் இவ்வுலகில் சான்றோரும் உண்டு. அவர் செய்த நல்வினையும் உண்டு. எனவே, ஐயம் உண்டு, பயமில்லை. தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் பல்லாண்டு வாழத் தடையில்லை.

*புறவுக் கருவன்ன புன்புல வரகின்*
*பால்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்*
*குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு*
*இரத்தி நீடிய அகன்றலை மன்றத்து*
*கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி*
*அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்*
*ககலாச் செல்வம் முழுதுஞ் செய்தோன்*
*எங்கோன் வளவன் வாழ்க என்றுநின்*
*பீடுகெழு நோன்றாள் பாடே னாயின்*
*படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்*
*யானோ தஞ்சம் பெரும இவ்வுலகத்துச்*
*சான்றோர் செய்த நன்றுண் டாயின்*
*இமயத் தீண்டிய இன்குரல் பயிற்றிக்*
*கொண்டல் மாமழை பொழிந்த*
*நுண்பல் துளியினும் வாழிய பலவே...* (புறம் 34)

உறையூரில் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தான். பாண்டி நாட்டில் பிசிர் என்ற ஊரிலிருந்த அவர்தம் உயிர் நண்பர் இதைக் கேள்விப்பட்டார். ஓடோடியும் வந்தார். சோழனைச் சூழ்ந்திருந்தவர் ஆந்தையாரைப் பல ஆண்டுகளாகக் கேள்விப்பட்டிருந்தவர். நரை திரை வீழ்ந்த முதியவராகவே அவரை நினைத்துக் கொண்டிருந்ததில் வியப்பில்லை. அவரை நேரில் கண்டார்கள், அவரிடம் இளமைப் பொலிவு குறுநகை செய்யக் கண்டார்கள். ஆச்சரியப்பட்டார்கள். கேட்டுத் தெரிந்து கொள்ளத்

துணிந்தார்கள். "ஐயா, உம்மைப்பற்றி பல ஆண்டுகளாகக் கேள்விப்பட்டிருக்கின்றோம். அதைக்கொண்டு நீர் தாத்தாவாக இருத்தல் வேண்டும் என்று எண்ணினோம். நீரோ இளமைப்பருவத்தினர் போல விளங்குகின்றீர். நரையும் இல்லை; திரையும் இல்லை. காரணம் யாதோ காண்கிலேம்" என்றனர். ஆந்தையார் அளித்த பதில் என்ன? "என் இளமைக்குக் காரணஞ் சொல்லுவேன் கேளுங்கள். என் மனைவி மாண்புடையவள். மக்கள் அறிவு நிரம்பிய திருவினர். யான் கருதியவாறே என் ஏவலர் பணியாற்றும் மரபினர். அரசன் அறக்காவலன். இவற்றிற்கெல்லாம் மகுடம் வைத்த தன்மையில் ஒரு காரணம் உண்டு. அதையும் தெரிவிப்பேன் செவிசாய்த்துக் கேளுங்கள். "யான் வாழும் ஊரில் நற்குணங்களால் அமைந்து ஐம்புலன்கள் அடங்கி வாழும் சான்றோர் பலர் வாழ்கின்றார்." இது பிசிராந்தையார் கண்ட இளமை இரகசியம். அந்த இரகசியத்தின் சிகரத்தில் சான்றோர் சாந்த அரசு செய்கின்றார்.

*யாண்டுபல வாக நரையில ஆகுதல்*
*யாங்கா கியரென வினவுதி ராயின்*
*மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்*
*யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனும்*
*அல்லவை செய்யான் காக்கும அதன்தலை*
*ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர்யான் வாழு மூரே!... (புறம் 191)*



# பகுத்தறிவுப் போட்டி

அந்தக் காலத்தில் அறிவுக்கு நல்ல மதிப்பிருந்தது. அறிஞர்களுக்கும் அப்படியே. "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றபோது எல்லாம் உடைய எல்லாரையும் அறிவுடையாரில் அடக்கிவிட்டார் திருவள்ளுவர். அந்த மட்டில் விடவில்லை. அறிவிலார் என்னுடையரேனும் இலர் என்றும் தீர்ப்புக் கூறிவிட்டார். "தத்தம் போல் கேடும் உளவாகும் சாக்காடும் வித்தகர்க்கல்லால் அரிது" என்றார் அதே அறிஞர் வள்ளுவர். அறிஞர்தம் மண்ணக வாழ்க்கையையும் வாழ்வோடு வளரும் வண்ணப் பெரும் புகழையும் சீர்தூக்கி நோக்கினால் அவர் தம் வளர் பெரும் புகழே பெருமாண்புடையதாகும்: எனவே, புகழ் உடம்பு மேம்படுவதாகும். வாழ்வில் கேடும், புகழ்நிலை நிற்பதாகும் சாவும், அறிஞர்க்கல்லால் பிறர்க்கு இல்லை என்று ஒரு தலையாகச் சொன்னார்.

அது அந்தக்காலம். இந்தக் காலத்தில் பகுத்தறிவுப் பாசறையில்கூட அறிவுக்கு மதிப்பில்லை. அங்கு பேச்செல்லாம் பகுத்தறிவுப் பேச்சே. மூச்செல்லாம் பகுத்தறிவு மூச்சே. அங்கு அறிஞர்க்கும் மதிப்பில்லை. பகுத்தறிஞர்க்குத்தான் மதிப்பு அதுவும் பட்டபூர்வமாக பிரகாசிக்கும் பகுத்தறிவுப் பெரியார் ஒரேயொருவரே! அவருடைய கூட்டத்தார் அவர்தம் பொன்னான மொழிகளை கண்ணாக மதித்து விரைந்து செயலாற்றவேண்டியவர்கள். பழங்கால சரித்திர ஆதாரங்களைச் சலித்துச் சலித்து, அரித்து அரித்து ஆணித்தரமாகக் காட்டி ஒரே இன அடிப்படையில் இறுக்கமாகவும் நெருக்கமாகவும் அமைக்கப்பெற்றதாக சொல்லப்படும் கழகங்கள் காலப்போக்கில் வேறு வேறு முழாங்களாக, மாறுபட்ட கூட்டங்களாக உருப்பெறுதற்குக் காரணம் என்ன? எல்லாம் பகுத்துப் பகுத்து அறிந்ததின் பலன்தான். பெரியாரின் முதிர்ந்த பகுத்தறிவுக்குப் போட்டியாக எழுந்த இளம் பகுத்தறிவுதான்.

இந்தப் பகுத்தறிவுப் போட்டி ஒரு குறிப்பிட்ட அரசியல் குழுவிலே ஒரு சிலரைப் பாதிக்கின்ற போட்டி.

ஆனால் இன்று நாடெங்கும் வெள்ளத்தின் பெருக்கைப் போல பரவிவரும் பகுத்தறிவுப் போட்டி எத்தனை ஆயிரம் மக்களைப் பாதித்தும் உபாதித்தும் வருகின்றது. இதனைத் தமிழ் நாட்டில் தோற்றுவித்து வளர்த்துவரும் பெருமை ஆனந்த விகடனுக்கு உரியதாகச் சொல்லப்படும். தற்போது இது பத்திரிகைகளையும் கடந்து விட்டது. தனித் தனி ஸ்தாபன ரீதியில் தழைத்து வருகின்றது. ஒவ்வொரு ஸ்தாபனத்தைச் சுற்றியும் எத்தனை கலெக்டர் ஆபீஸ்கள்! எத்தனை கலெக்டர்கள்! எத்தனை குமாஸ்தாக்கள்! எத்தனை சிப்பந்திகள்!

பற்பல விடங்களில் பகுத்தறிவுப் போட்டிகள் குதிரைப் பந்தயம் போலவும் சொக்கட்டான் ஆட்டம் போலவும் பெருஞ் சூதாட்டமாக மாறி வருவது பரிதாபத்திற்குரியது. இவை பகுத்தறிவுப் போட்டியா? அன்றி பகுத்தறிவுக்குப் போட்டியா? அறிவுப் போட்டியா? அன்றி அதிர்ஷ்டப் போட்டியா? அறிவும் அதிர்ஷ்டமும் கலந்ததென்றால் ஹம்பக் வேலையும் உடன் கலந்திருக்கின்ற கூட்டுக் கலவையா? பகுத்தறிவுப் போட்டி புதிய மொந்தையில் உள்ள பழைய கள். குபேர சம்பத்துக்குக் குறுக்குவழி காட்ட முற்படும் சாகசக்காரியான பகுத்தறிவுப் போட்டி புதிய பெயரிலே உலவித்திரியும் பழைய மூதேவி.

பொருள் வேண்டும்தான். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்று தெரிந்து சொன்ன திருவள்ளுவர் "செய்க பொருளை" என்று கட்டளையிட்டுச் சொன்ன திருவள்ளுவர் திறன் அறிந்து தீதின்றி வந்த பொருள்தான் அறம் தரும் இன்பம் தரும் என்று அரண்கோலிச் சொல்லவும் மறக்கவில்லை.

பகடை உருட்டுஞ் சூதாடியோ? அன்றி பகுத்தறிவுப் போட்டிச் சூதாடியோ? சூதாடி எவனாயினும் ஆகுக. அவனுக்கு நல்வாழ்விற்கு வழி இல்லவே இல்லை என்பது திருவள்ளுவர் முடிந்த முடிபாகச் சொல்வது. சூது விரும்பினால் அந்த விருப்பத்திற்கும் முடிவில்லை, அதனால் உண்டாகும் வேதனைக்கும் முடிவில்லை. சூதன் வென்றால் கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடைவானா? இழக்க

இழக்க இன்னமும் ஆடுவோம் என்ற எண்ணந் தோன்றி அவனை எப்படி ஆட்டி அலைக்கழிக்கும். ஏற்பட்ட பழக்கத்தை அவன் விட்டுவிடுவான் என்றால் பழக்கம் அவனை விட்டால்தானே!

சூதன் ஒன்றெய்தி நூறு இழப்பான். ஒரு பணம் பெற்று நூறு பணம் இழப்பான் என்பது மட்டுந்தானோ? அவன் இழப்பது நூறு அல்லது நூற்றுக்கு மேலே அவன் அடைவது ஒன்றே. உரு இழப்பான். உண்மை இழப்பான். மானம் இழப்பான். நாணம் இழப்பான். அன்பு இழப்பான். பண்பு இழப்பான். இப்படி நூறு நலன்களைச் சேர இழப்பான். கடைசியில் அவன் பெறுவது ஒன்றே. சூதாடி என்ற பெயர்தான் அவன் பெறும் பேறு!

மன்னாதி மன்னர் பஞ்சபாண்டவர் நளனாதியர் சூதால் எய்திய துயரைக் காவியங்கள் நமது கண்முன் ஓவியங்களாக நிறுத்திக் காட்டுகின்றன. சூதாட்டம் விழைந்த மகுடபதிகளே மண்டியிட்டனர் என்றால் சாதாரண பதிகளின் கதி என்னவது!

*மா பாரதத்தின் வரலா றறிந்து சிவன்*
*சீர்பாதம் போற்றும் தினகரா—ஆபாதர்*
*ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்*
*நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.*

*வெற்றிநளன் சூதாடி வீடு விட்டுக் கானுறைந்தான்*
*சிற்றிடையும் தானும் சிவசிவா—சுற்றும்*
*உடைசெல்வம் ஊனொளி கல்வியென்றைந்தும்*
*அடையாவாம் ஆயம் கொளின்.*



# அன்பர் பணி

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற உயர் நோக்கம் உள்ளத்தில் உரம்பெற்று அதில் மலர்ந்த ஆர்வ ஆசையின் வெளியீடுதான் சேவை. தனி மனிதன் சேவை செய்கின்றான். பலர் சேர்ந்தும் சேவை செய்கின்றார்கள். ஒருவன் ஒருவனுக்கு உதவுவது சேவை. தனி நபரோ அல்லது சிலரோ பலருக்கு உதவுவதும் சேவை. நாம் அயலவர்க்குச் செய்யும் உதவியைச் சேவை என்றும் ஊழியம் என்றும் தொண்டு என்றும் பணி என்றும் குறிப்பிடுகின்றோம். இச் சொற் கூட்டத்தினுள்ளே பிற சொற்களில் ஒலிக்காத தனிப்பெரும் பொருள் பணி என்ற சொல்லில் தொனிக்கக் கேட்போம். இறைவன் பணித்தபடி செயலாற்றுவது பணி. அறிவொழுக்கஞ் சான்ற ஆன்றோர்கள் பணித்தபடி செய்யும் செயல் பணி. ஆரவாரம் அற்றது பணி. படாடோபம் அற்றது பணி. அமைதியானது பணி. அடக்கமானது பணி. பணிவாக ஆற்றப் பெறுவது பணி.

இக்காலத்தில் சேவை, ஊழியம், தொண்டு, பொது நலம் என்று பலவாறாகப் பேசப்பட்டு வருகின்றது. ஆங்காங்கே சேவா தளங்கள் செயல்புரிகின்றன. ஊழியர் கூட்டங்கள் உழைப்பில் ஈடுபட்டுள்ளன. தொண்டர் குழாங்களும் பொது நலக் கழகங்களும் ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும் ஆக்க வேலைகள் செய்கின்றன. இத்தகைய சமூக சேவைக்கும் சேவா ஸ்தாபனங்களுக்கும் உள்வீடாக உயிர் நாடியாக இருப்பது எது? அது அன்பு. வேறுபாடு கருதாத விழுமிய அன்பு. தன்னலங் கருதாத தகைசால் அன்பு. இவர் நமக்கு வேண்டியவர், இன்னார் நம்மிடத்து அன்புடையவர் என்ற காரணத்தால் செய்யும் பணி பயன் கருதிய பணி. வேண்டியவர் வேண்டாதவர் என்ற விகற்பமின்றி நம்மிடத்து அன்புடையர் அன்பிலார் என்ற வேற்றுமை பாராட்டாது யாவரையும் அன்பராகக் கண்டு அன்பே காரணமாகக் கொண்டு அன்புடையவர் செய்யும் பணி அன்பர் பணி. சிலரோடு ஒருங்கியைந்து வாழ்வது சிரம சாத்யம். சிலர் பேசினால் பொறுக்கவியலாது. சிலரைக் கண்டால் தாளாது. சிலரை நினைத்தாலே ஆகாது.

இன்னலையே மாற்றுரையும் வேற்றுரையும் உற்றுராகக் கொண்டு பணியாற்றுவதே "அன்பர் பணி". பணி செய் வார்க்குப் பகைவர் இல்லை, யாவரும் அன்பர்களே. இந்த எண்ணம் அவர் தம் உள்ளத்தில் இடம்பெறவில்லை யாகுல் அவர் பணி செய்யும் பக்குவத்தில் உரம் பெற வில்லை.

பணி செய்யப் பலம் வேண்டும்; பக்குவம் வேண்டும். பலத்தையும் பக்குவத்தையும் அருள்பவர் ஆண்டவன். "கர்த்தன் நகரத்தைக் காவாராகில் காக்கிறவன் கண் விழிப்பது வீண்." பொதுநலப் பணியில் நம்மை உருவாக்கிவிடுபவர் கடவுள். அந்தப் பணியை வெற்றிபெறச்செய்ய அருள் புரிபவரும் அவரே. பணி செய்வார் இதனை உணர மறுப்பதால் தற்பெருமையையும் தானுண்மையையும் அலை மோத விடுகின்றுர்கள். தன் முனைப்பையும் தறுதலைத் தனத்தையும் தாண்டவமாடவிடுகின்றுர்கள். உருவான உறுதியான செயல்முறை உருண்டோடி மறைகின்றது.

சுகம் எங்கே என்று மனிதன் தேடி அலைகின்றுன். இன்பம் பணத்தில் கிடைக்குமா? பதவியில் கிடைக்குமா? அதிகாரத்தில் இருந்தால் வருமா? ஆட்சிபீடத்தில் அமர்ந்தால் அகப்படுமா? இவ்வாறு இன்ப வேட்டையில் ஏங்கி உழலும் மனிதக் கூட்டத்தைக் கண்டு தாயுமானவர் பரிதாபப்படுகின்றுர். ஏன், தாமும் அவ்வாறு மயங்கிய நிலையில் தத்தளித்த தன்மை தம் நினைவிற்கு வருகின்றது. தெளிந்த நிலையில் உண்மை உதயமாகின்றது. உலகோர் அறிந்து பயன்பெற உபதேசிக்கின்றுர்.

**தாயுமானவர்:** இன்பம் வேண்டுமா?

**மாணவர்:** இது ஒரு கேள்வியா? இன்பத்தை நாடாதார் யார்? சுவாமி!

**தாயுமானவர்:** எது வேண்டும்? சொல்லுங்கள். நிலைத்த இன்பமா? அல்லது நிலையாத இன்பமா?

**மாணவர்:** நிலையான இன்பத்தைத்தான் தேடுகின்றோம். அழிந்துபடும் இன்பம் யாருக்கு வேண்டும்?

**தாயுமானவர்:** நிலையான இன்பம் பணத்தினுல் வராது பதவியால் வராது. அதிகாரத்தால் அடையமுடியாது. ஆட்சி முறையாலும் பெற இயலாது.

**மாணவர்:** பின் எதனுல் தான் அடையமுடியும்?

**தாயுமானவர்:** நாம் தேடினுல் வராது.

**மாணவர்:** நாம் தேடினுல் வராதா? பின்னர் அதை நாம் எப்படி அடைவது?

**தாயுமானவர்:** நாம் தேடி அடைய வேண்டியதில்லை. அது நம்மை நாடி அடையும்.

**மாணவர்:** அதற்கு வழி?

**தாயுமானவர்:** இதோ இந்த வாசகமே வழி.

*"அன்பர் பணி செய்ய எனை*
*ஆளாக்கி விட்டு விட்டால்*
*இன்பநிலை தானே வந்து*
*எய்தும் பராபரமே!"*



# அறிவுடைமை

*"சென்ற விடத்தாற் செலவிடாத் தீதொரீஇ*
*நன்றின்பா லுய்ப்ப தறிவு."*

மனித வாழ்வு பரிபூரணமாக மலர்ச்சியுற உரமூட்டும் உடைமைகள் பத்து என்பதும் இவற்றுள் தலையாயது அறிவுடைமை என்பதும் வள்ளுவர் கருத்து. திருக்குறளில் உடைமைகள் என்ற அளவில் பத்து உடைமைகள் பேசப்படுகின்றன, இவை அடக்கமுடைமை, அருளுடைமை அறிவுடைமை அன்புடைமை, ஆள்வினையுடைமை, ஊக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நாணுடைமை, பண்புடைமை, பொறையுடைமை என்பன.

இப்பத்து உடைமைகளுள் அறிவுடைமையை ஆசிரியர் ஓர் உன்னதமான கலைக்கோயிலுள்ளே உயரிய பீடத்தில் அமைத்துக் காட்டுகின்ருர். கல்வி, கல்லாமை, கேள்வி என்ற கோபுர வாயில்கள் வழியாய் நம்மை அழைத்துச் சென்று அந்த அறிவுப் பேழையை திறந்து காட்டுகின்ருர்.

அறிவு ஓர் உடைமை. ஒப்புயர்வற்ற தனிப்பெரும் உடைமை. மனிதப் பண்போடு ஒட்டிய இனியதோர் உடைமை. மனிதனை மனிதனுக்கும் மகத்தான உடைமை. அடக்கம், அருள், அன்பு, பண்பு இன்னோரன்ன பிற உடைமைகளுக்கெல்லாம் ஊற்ருகிய உடைமை. ஆள்வினையுடைமையும், ஊக்கமுடைமையும், பொறையுடைமையும், நாணுடைமையும் நலம்பெறச் செழித்தோங்கும் நன்னிலமாகிய உடைமை.

அறிவு என்ற சொல்லில் நிறைந்த பொருள் புதைந்திருக்கின்றது. தெரிதலும் புரிதலும் அறிதலும் ஒன்றெனவே தோன்றும். இவற்றுள் பொருளாற்றல் உடையது அறிதல். தெரிதலும் அறிதலும் தம்முள் ஒத்தன போலவே தென்படும். ஆனல் தெரிதல் வேறு அறிதல் வேறு. பார்த்தலும் காணலும் ஒன்றல்லவே. பார்த்தல் பரந்துபட்டுப் பார்த்தல் பொதுவாகப் பார்த்தல். காணுதல் கண்கொண்டு பார்த்தல் குறித்துப் பார்த்தல். இதைப் போலவே ஒன்றைப் புரிந்துகொள்வதின் பொதுநிலை தெரிதல். அதனை உணர்ந்து காணும் சிறப்பு நிலை அறிதல். மொழி, கலை, வரலாறு, விஞ்ஞானம் முதலியவற்றில் விஷய ஞானம் பெறுவது தெரிதல். நான் யார், என் உள்ளம் யார், ஞானங்கள் யார் என்ற ஆராய்ச்சியில் ஆன்ம ஞானம் பெறுவது அறிதல். "தன்னை அறியும் அறிவே அறிவாகும்". நல்ல தன் நலனும் தீயதன் தீமையும் உள்ளவாறு உணர்தல் அறிவு."

எது அறிவு என்பதை வள்ளுவப் பெருந்தகை வரையறுத்து உரைக்கின்ருர். அறிவு தேர்வில் வெற்றிபெறும் திறமை என்று நினைப்பவருண்டு. கலைக்கூடங்களில் விலையாகும் சரக்கென்று கருதுபவரும் உண்டு. புத்தகங்களில் புதைந்து கிடக்கும் பொருள் என்று போற்றுவோரு

முண்டு. வள்ளுவர் கருத்தில் அறிவு பரிவர்த்தனை செய்யப் படும் சரக்கல்ல. அது பரிசுத்தமான நடைமுறை ஒழுக்கம். மனம் சென்ற வழியெல்லாம் செல்லவிடாது அதனைத் தடுத்துநிறுத்துவது அறிவு. தீமையை விலக்கி ஒழிப்பது அறிவு. நன்மையில் நிலைபெறச் செலுத்துவது அறிவு. குதிரையை நிலமறிந்து இயக்கும் பாகன் போல மனத்தை புலமறிந்து இயக்குபவன் அறிஞன். பழி பாவத்தைப் போக்குபவன் அறிஞன். நலஞ்சூழக் கடமையாற்று பவன் அறிஞன்.

அறிஞன் தன்னைப் பொறுத்த அளவில் அவனது இலக்கணஞ் சொன்ன வள்ளுவர் அவன் பிறரோடு இயங் கும் முறை எப்படிப்பட்டது என்பதை நயம்பட எடுத் துக்காட்டுகின்றார். அறிஞன் தான் அறிந்ததைப் பிறருக்கு அறிவுறுத்துகின்றான். அவ்வாறு அறிவுறுத்துங்கால் அவன் கூறும் பொருள் அரிய பொருளாயினும் கேட் பார்க்கு எளிய பொருளாகவேண்டும். எளிய பொருளாவது மட்டுமன்று, கேட்பார் இதயத்தில் நுழையும் பொருளாத லும் வேண்டும். தான் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும். பிறரிடம் கேட்கக்கூடாது என்பது கூடாது. அவன் பேசவும் வேண்டும். பிறர் பேசுவதைக் கேட்கவும் வேண்டும். பிறர் பேச்சில் நுண்பொருள் காணவேண்டும்.

*"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு."*



# அன்புடைமை

அன்பின் தன்மையைச் சொற்களால் அளவிட்டுரைக்க இயலாது என்பது திருவள்ளுவ ஞானியார்க்கு நன்ருகத் தெரிந்திருந்தது. வள்ளுவர் அறததின் இலக்கணஞ் சொன்னுர். மறத்தின் இலக்கணஞ் சொன்னுர். அருளின் பண்பு சொன்னுர். பண்பின் பண்பு சொன்னுர். இன்னேரன்ன கருத்துப் பொருளேயெல்லாம் காட்சிப் பொருள் போல எளிதாகக் காட்டிய தேர்ந்த ஆசிரியர் அன்பைப்பற்றிக் கட்டுரைக்காது விட்டுவிடுவாரா? அறிவு இது என்று அறிவுடைமை அதிகாரத்தில் ஐந்து முறை அடுக்கியும் அழுத்தியும் சொன்ன ஆசான் அன்பு இது என்று ஒருமுறையேனும் உரைத்துக் காட்டாது போவாரா?

அன்பு என்ருல் நமக்கு நன்ருக இனம் தெரிகின்றது. அன்பு வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்று அறிந்திருக்கின்றேம். அது இன்னது என்று எடுத்துச் சொல்லத்தான் தெரியவில்லே. அன்பை யாவரும் அறிகின்றேம். அதனே எவரும் அறியவில்லே. 'அன்பெனும் ஒன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்ருல்' என்பர் கம்பர். அன்பு அணுவைப் போன்றது. அதுவே மலேயையும் போன்றது. அன்பு அந்தரங்கமானது. அதுவே பகிரங்கமுமானது. அன்பு அறத்திற்குத் துணையாவது. அதுவே மறத்திற்குத் துணையாவது. அன்பும் மலரினும் மென்மையானது. அதுவே கற்பாறையினும் வன்மையது. அன்பு நீரினும் தண்மையது. அதுவே நெருப்பினும் வெம்மையது. அன்பு இல்லறப் பண்பு: அதுவே துறவறப் பண்பு. அன்பின் மாண்புபற்றி கவிபாடலாம். அன்பின் அடிப்படையில் காவியம் எழுப்பலாம். அன்பே பொருளாக அரும் பெரும் நூல்கள் எழுதி எழுதிக் குவிக்கலாம். ஆனல் இதுதான் அன்பு என்று அறுதியிட்டுரைக்க இன்னமுஞ் சிரமமாக இருக்கின்றது.

பழைய உரையாசிரியர்கள் அன்பு இதுவென்று சொல்ல முயன்றிருக்கின்றூர்கள். அவர்கள் முயற்சியில்

அன்பின் சாயை நிழலிடக் காண்போம். "மனை மக்கள் முதலிய தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் ஆசையே அன்பு" என்று பரிமேலழகர் கருதி யுரைத்தார். தொல்காப்பிய உரையாசிரியர் ஒருவர் "அன்பு என்பது அருளுக்கு முதலாகி மனத்தின்கண் நிகழும் நேயம்" என்றனர். இன்னொருவர் "அன்பாவது மனைவியிடத்தும் தாய் தந்தை மக்களிடத்தும் மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்து நிற்கும் நேயம்" என்றனர்.

அன்பு இலக்கணத்தில் எல்லைக்கோட்டில் அகப்படாத அகண்டாகாரமானது என்பதை வள்ளுவர் அறிவார். ஆகவே அதற்கு இலக்கணம் சொல்லி அன்பைத் தொல்லைப்படுத்த அவர் விரும்பவில்லை.

அன்புடைமை என்ற அதிகாரத்தில் அன்பின் இயல்பைப் பேசவில்லை. அதன் இருப்பைப் பேசுகின்றார். அன்பு உண்மையானது என்பதை உணர வைக்கின்றார். அன்பு காட்சிப் பொருளல்ல, கண்ணால் காணுதற்குரியதல்ல; எனவே, அதைப்பற்றி கவலை வேண்டாம் என்றிருக்க வேண்டாம். அன்பு உள்ள பொருள். அது உள்ளப் பொருள். உள்ள பொருள் என்பதையும் உள்ளப்பொருள் என்பதையும் எங்கே காண்கின்றோம்? அன்பனிடத்தில் காண்கிறோம், வீரனிடத்து வீரத்தையும், அறிஞனிடத்து அறிவையும், அருளாளனிடத்து அருளையும் காண்பது போல. எப்படிக் காண்கின்றோம்? அவனுடைய கண்ணீரால் காண்கின்றோம். தன் அன்பர் துன்பம் கண்டபோது அன்பன் கண்கலங்குகின்றான். அவன் விழி சொரியும் கண்ணீரே அவனுள்ளேயுள்ள அன்பை யாவரும் அறியத் தூற்றுகின்றது. வீரன் தன் வீரத்தை மறைத்தாலும், அறிஞன் தன் அறிவை மறைத்தாலும், அருளாளன் தன் அருளை மறைத்தாலும், அன்பன் தன் அன்பை மறைக்க முடியாது. அன்பிற்குப் பிறர் அறியாமல் அடைத்து வைக்கும் தாழ் இல்லை.

அன்பர் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர். அன்பு முயற்சியுற்றது; அயர்ச்சி அற்றது. அன்பு தன்னைமறப்பது. தாய் அன்பைப் பாருங்கள். ஒவ்வொரு பிள்ளைப்

பேற்றிலும் பார்க்க பெண்ணை வருத்தமுறுகின்றாள் அன்னை. மயானக் காட்டில் நுழைந்து மீள்கின்றாள். தன் குழந்தையின் நோய்க்காகத்தான் பத்தியம் காக்கின்றாள். அக்குழந்தைக்குத் தனது இரத்தத்தையே பாலாக மகிமையோடு ஊட்டுகின்றாள். அன்பு தியாக சிகரம். தாயன்பு அன்பின் சிகரம்.

அன்பற்றவர் வாழ்க்கை பயனற்ற வாழ்க்கை. அவருக்குக் காணி பூமி இருக்கலாம். காசு பணம் இருக்கலாம். அவருக்கு இடம் பொருள் ஏவல் முதலிய எல்லாத்துணையும் இருந்தும் என்ன பயன்? அன்புதான் அகத்தின் உறுப்பு. அன்பாகிய அகவுறுப்பில்லையேல் புறவுறுப்பாகிய பொன் என்ன? புகழ் என்ன? புலமை என்ன? பூதலத்தை ஆளுகின்ற பலம்தான் என்ன? இவையெல்லாம் பயனற்றவையே.

அன்புடையார் உயிருடையார்; அன்பிலார் பிணம் போன்றோர். வாழ்க்கை தழைக்க வேண்டுமா? பூத்துக் காய்த்துக் கனியவேண்டுமா? அன்பினால்தான் இது ஆகும். அன்பில்லையேல் வாழ்க்கை தழைக்காது, பூத்துக் காய்த்துக் கனியாது. அன்பிலாதான் வாழ்க்கை தழைத்தது என்றால் ஆகாத காரியம். அது வற்றிய மரம், வற்றண்டபாலை நிலத்தில் தளிர்த்தது என்பதைப் போலத்தான். அது ஒப்பிலா மலடிபெற்ற ஒரு மகன் முயல்கொம்பேறி ஆகாயப் பூவைப் பறித்த கதையைப் போன்றதுதான்.



# ஆள்வினை உடைமை

வெந்ததைத் தின்று விதி வந்தால் சாவோம் என்ற ஒரு அலாதிப் போக்கிலே யாதொரு இலட்சியமுமின்றி வாழ்க்கையை ஏதோ ஒரு வகையில் தள்ளிக்கொண்டு போகின்றவர் வெறும் மனிதர்; விந்தை மனிதர்; மந்தை மனிதர். வாழ்க்கை வாழ்வதற்காக என்ற நோக்கில் உயர் இலட்சியத்தை எதிர் நிறுத்தி அதை அடைகின்ற வழியில் அயராது உழைக்கும் ஆள்வினை உடையார் வையத்து வாழும் முறை அறிந்த வீர மனிதர்; அருந்திறல் அமைந்த தீர மனிதர்; வைர உள்ளம் படைத்த வழிகாட்டி மனிதர். வெற்றியும் விழுச் செல்வங்கள் பலவும் இந்த வீர தீரர்களின் தாள் பணிந்து அஞ்சலி செய்கின்றன. குற்றேவல் செய்யக் கூடிவந்து கைகட்டி வாய் பொத்திக் குழைந்து நிற்கின்றன.

ஆள்வினை உடைமை என்ற தொடர்க்கு இடைவிடாத மெய்ம் முயற்சி உடையனாதல் என்றும் ஆளும் வினை உடைமை என்றும் பொருள் விரிப்பர் பரிமேலழகர். ஆள்வினை என்பது முயற்சி. முயற்சி என்றாலே அது ஊக்கங் குன்றாத முயற்சிதான்; இடையீடில்லாத முயற்சிதான். ஏழுநாள் முயற்சி எட்டாம் நாள் தளர்ச்சி என்பதல்ல. எட்டு நாள் ஊக்கம் ஒன்பதாம் நாள் தூக்கம் என்பதல்ல. இலட்சியப் பாதையில் தடைபடாத பந்தய ஓட்டம்தான் முயற்சி. வழியில் குடைசாய்ந்து வீழ்வதோ எக்கி இளைத்துக் களைப்பை மாற்ற இடம் தேடுவதோ முயற்சி என்னும் பெயருக்குப் பொருந்துவதில்லை. மக்கள் முயற்சி மெய்யின் முயற்சி மட்டுமன்று. அது மனமொழி உள்ளிட்ட மெய்ம் முயற்சி, திரிகரண சுத்தியாய்ச் செய்யப்படும் மெய்யான முயற்சி. முயற்சியை ஆள்வினை என அழைப்பானேன்? மக்கள் கருத்தை யெல்லாம் கவர்ந்தாளுதற்குரிய செயல் ஆதலின் ஆள்வினை. தன்னைச் சார்ந்தாரை ஆளாக்கும் பெற்றியதாதலின் ஆள்வினை, ஆளுக்குரிய வினை ஆள்வினை; ஆளும் வினை ஆள்வினை.

ஆள்வினைக்கு ஊற்றும் உற்பத்தி ஸ்தானமுமாய் இருப்பது மனம். இந்தச் செயலாவது நம்மால் நிறைவேறுவதாவது என்ற தளர்ந்த மனப்பான்மை செயல்கோட்டையைத் தகர்க்கும்பீரங்கி. மனம் வைத்து முயன்றால் முயற்சிக்கேற்ற செயல் திறம் தானாக மலரும். செயற்கரிய செய்வார் மனத்தைத் தம் வசமாக்கிக்கொண்ட மாண்பினர். இராமலிங்க அடிகளார் போன்ற செம்மனச் செல்வர்.

*"மனமெனுமோர் பேய்க்குரங்கு மடைப்பயலே நீதான்*
*மற்றவர்போல் எனை நினைத்து மருட்டாதே கண்டாய்*
*இனமுறவென் சொல்வழியே இருத்தியெனில் சுகமாய்*
*இருந்திடுநீ என்சொல்வழி ஏற்றிலையா னாலோ*
*இனையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன் உலகம்*
*சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே*
*நனவில் எனை அறியாயோ யாரெனவிங் கிருந்தாய்*
*ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே"!*

என்று வள்ளலார் தம் உள்ளத்தை வசப்படுத்தி வைத்திருந்த காரணத்தாலன்றோ செயற்கரிய செய்து சீர்த்தி பெற்றார்.

ஆம்,

*அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்*
*பெருமை முயற்சி தரும்.*

அருஞ் செயலை நிறைவேற்ற உளங்கொண்டு முனைந்தால் மட்டும் போதுமா? செயல் தொடங்கியபின் இடைநிலையிலும் எந்நிலையிலும் சோர்வுக்கு இடம் தரலாகாது. செயலை நிறைவு செய்பவனுக்குத்தான் உலகம் கைகொடுக்கும். அறைகுறையாக விட்டவனை அது கைவிடுக்கும். எனவே எடுத்த செயலை இனிது தொடுத்து முடிக்க வேண்டும்.

*வினைக்கண் வினைகெடல் ஓம்பல்; வினைக்குறை*
*தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகம்.*

வேளாண்மை என்பது பிறர்க்குத் துணையாம் பேராண்மை. முயற்சியாகிய தாளாண்மை இல்லையேல் வேளாண்மைக்கு வழி ஏது? வேளாண்மையின் உயிர் நாடியாக இருந்து அதனை உந்துவது தாளாண்மைதானே. பேடியின் கையிலுள்ள வாள் கூர்மையுடையதுதான். ஆனால் அவனது நெஞ்சிலுள்ள அச்சத்தால் அவன் நிலை தடுமாற அது செயலற்றுப் படிகின்றது. தாளாண்மை யற்றவன் வேளாண்மையும் வறுமைச் சூழலில் வதங்கி மடிகின்றது.

*தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே*
*வேளாண்மை என்னுஞ் செருக்கு.*

*தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை*
*வாளாண்மை போலக் கெடும்.*

ஒருவன் தனது இன்பத்தை விரும்பவில்லை. செயல் நிறைவேற்றுவதே அவனது ஏக நோக்கம்: இவன்தான் சுற்றத்தார் துன்பந்துடைக்கும் இரும்பு மனிதன். சுற்றத்தாரைத் தாங்கும் கற்றூண்.

*இன்பம் விழையாதான் வினைவிழைவான் தன்கேளிர்*
*துன்பம் துடைத்தூன்றும் தூண்.*

முயற்சிவழி வளம் பெருக்கும் பெருவழி. சோம்பல் வழி வாட்டம் பெருக்கும் சிறுவழி. சோம்பலிலே மூதேவி தங்குகின்றாள் எனவும் முயற்சியில் சீதேவி வாழ்கின்றாள் எனவும் அறிந்தோர் கூறுவர்.

*முயற்சி திருவினை ஆக்கும் முயற்றின்மை*
*இன்மை புகுத்தி விடும்.*

*மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்*
*தாளுளான் தாமரையினாள்*

செல்வம் இன்மை ஒரு பழியல்ல; ஆளவினை இன்மை தான் பெரும் பழியாகும். எந்த முயற்சிக்கும் அந்த முயற்

சியின் அளவு பலன் உண்டு. ஊழ்வினை யென்பதெல்லாம் மனிதனுடைய ஆள்வினைக்கு முதுகு காட்டி ஓட வேண்டியதுதான்.

*பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்*
*தாள்வினை இன்மை பழி*

*தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்*
*மெய் வருந்தக் கூலிதரும்*

*ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்*
*தாழா துஞற்று பவர்.*



# அடக்கமுடைமை

அடக்கத்திற்கு ஓர் ஆற்றல் உண்டு. சாந்தத்தில் ஒரு சக்தி உண்டு. அடக்கமுடைமைக்கு ஒரு தனி மதிப்பு உண்டு. அதிக தூரம் போவானேன்? திருக்குறளின் 133 அதிகாரங்களையும் அகர வரிசையுள் அடுக்கிப் பார்ப்போம். முதலிடம் பெறுவது இந்த அடக்கமுடைமைதான். ஏனைய 132 அதிகாரங்களும் இந்த அடக்கமுடைமைக்குப் பின் நிற்கவேண்டியவைதாம். அருளுடைமை அன்புடைமை அறிவுடைமை ஆள்வினை உடைமை ஒழுக்கமுடைமை முதலிய உடைமைகள் எல்லாம் இந்த அடக்கமுடைமைக்குப் பின் அடங்கியிருக்க வேண்டியவைதாம். சான்ருண்மை செங்கோன்மை சொல்வன்மை முதலிய வீறு சான்ற ஆற்றல் உடைமைகள்கூட இந்த அடக்கமுடைமைக்குப் பின் மடங்கி இருக்கவேண்டுவனதாம்.

அடக்கமுடைமைக்கு உரையாசிரியர்கள் கூறும் விளக்கங்கள் வருமாறு:

அதாவது மெய் மொழி மனங்கள் தீ நெறிக்கண் செல்லாது அடங்குதல் உடையனாதல். —பரிமேலழகர்

அடக்கமுடைமையாவது மனம் மொழி மெய்களால் அடங்கி ஒழுகுவது. —மணக்குடவர்

அடக்கமுடைமையாவது மனம் வாக்குக் காயங்கள் பாவத்தின் வழி செல்லாமல் அடக்குதல். —பரிதியார்

இனி அடக்கத்தின் விளக்கத்தை வள்ளுவர் காட்டும் வழியில் காணபோம்.

**அடக்கத்தின் சிறப்பு**

அடக்கம் அமைந்த அருளில் செலுத்தும். அடங்காமை நிறைந்த இருளில் புகுத்தும்.

அடக்கம் ஒரு செல்வம். உருண்டோடிடும் பணம் காசு போன்ற செல்வமல்ல அது. உறுதியாய் நிற்கும் உயரிய செல்வம். இச் செல்வத்தைப் பேணுபவனே தன்னைக் காக்கும் கருத்துடையவன். அடக்கம் ஓர் அறிவு நெறி. இந்த அறிவு நெறி நின்று அமைந்து வாழ்பவனே சீர்மைகள் பெற்றுச் சிறப்பெய்துவான்.

அடக்கம் உடையவன் எப்படி இருப்பான்? அவன் தோற்றம் எவ்வாறிருக்கும்? அவன் மலையைப் போன்றிருப்பான். சரியாய்ச் சொல்லவேண்டுமானால் அவனுடைய தோற்றம் மலையிலும் மாண்புடைய தோற்றம். மலை விளங்கித் தோன்றுவதுதான். ஆனால் அதை விளக்கு வைத்துப் பார்க்கவேண்டிய தேவையும் தொலை நோக்காடி கொண்டு காணும் தேவையும் காலத்தையும் இடத்தையும் பொருட்டு ஏற்படலாம். மலை அளக்கலாகா அளவும் பொருளும் உடையதென்பார்கள். அதனையும் அளக்க ஒரு தென்சிங்கு வரலாம். ஒரு ஹில்லேரி வரலாம். அடக்கம் உடையவனை அளக்க எவரால் சாலும்? மலை துளக்க

லாகா நிலையும் தோற்றமும் உடையதென்பார்கள். அதுவும் இராவணனுக்கு அசைந்து கொடுத்ததாகப் புராணம் கூறும். நில நடுக்கத்தில் மலை நடுக்கம் அடங்கிவிட்டது. அடக்கம் உடையவன் எந்த நடுக்கத்திலும் அடங்காதவன்.

*அடக்கம் அமாருள் உய்க்கும் அடங்காமை*
*ஆரிருள் உய்த்துவிடும்*

*காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்*
*அதனினூஉங்கில்லை உயிர்க்கு*

*செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்*
*தாற்றின் அடங்கப் பெறின்*

*நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்*
*மலையினும் மாணப் பெரிது.*

## செல்வர்க்கு ஒரு செல்வம்

அடக்கம் ஏழைகளின் இயல்பு, கையாலாகாதவனின் கடைப்பிடி, உதவாக்கரைகளின் உயரிய இலட்சணம் என்று எண்ணுவோமானால் அந்த எண்ணந் தப்பான எண்ணம். அடக்கம் ஏழை, பணக்காரன், படித்தவன், படியாதவன் ஆகிய எவர்க்கும் இசைந்து நலந்தரும் பண்பு. இன்னுமொரு சிறப்பு: செல்வர்கள் அடக்கமுடையவர்களாயிருந்தால் அவர்களுக்கு ஏற்கனவேயுள்ள செல்வத்தோடு இந்தப் பணியாகிய செல்வம் சேர்ந்து மதிக்கத்தக்க சிறந்த செல்வமாகின்றது.

*எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்*
*செல்வர்க்கே செல்வம் தகைத்து.*

## மெய்யடக்கம்

ஆமை தீங்கு வருவது உணர்ந்து தன் தலை கால்களை ஓட்டினுள் அடக்கி அமைந்திருக்கின்றது. தீங்கு தவிர்ந்தது என்று அறியும்போதே தலையையும் கால்களையும் நீட்டி இயங்குகின்றது. மனிதனும் தீய வழிகளில் செல்லவொட்டாமல் ஐம்புலன்களைத் தன்னுள் அடக்கிக் கொள்ளவேண்டும். நல்ல வழிகளில் மட்டும் புலன்கள்

தொழிற்படவேண்டும். இது எக்காலத்துக்கும் இதம் தரும் இனிய வழியாகும்.

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*
*எழுமையும் ஏமாப்பு உடைத்து.*

**மொழியடக்கம்**

காக்கப்படும் புலன்களிடம் முதலிடம் பெறவேண்டியது நாப்புலன். பிற புலன்களைக் காவாதேபோனால் அதனால் பாதிக்கப்படுபவன் புலனடக்கம் அற்ற அந்த ஒருவனே. நாவடக்கம் இன்றிப் பிறர் மனம் புண்படப் பேசுபவன் எத்தனை பேருக்கு எவ்வளவு பெரும் துன்பம் இழைக்கின்றான்? ஒரு தீச்சொல்லால் ஒன்பது அறங்களை அழித்து விடுகின்றான் அல்லவா? தீப்புண் ஆறும் நாப்புண் ஆறுமா?

*யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு*

*ஒன்றானுந் தீச்சொற் பொருட் பயன் உண்டாயின்*
*நன்றாகா தாகி விடும்*

*தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே*
*நாவினால் சுட்ட வடு*

**மனவடக்கம்**

மொழியடக்கத்தின் அடிப்படை மனவடக்கம். மனத்தில் தோன்றும் கோபத்தை அடக்கினால் சினந்து பேசும் செயலுக்கு இடமில்லை. சினங்காக்கும் கல்வி சிறந்த கல்வி. இந்தக் கல்வி ஞானமுடையவன் அறத்தைத் தேடி அலையவேண்டாம். அறமே இவனைத் தேடி வரும். வீட்டு வாயிலில் வந்து பேட்டிகாண விழையும், தருணம் கண்டு இவனை மருவி மகிழும்.

*கதம்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி*
*அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.*



# ஒழுக்கமுடைமை

ஒழுக்கமுடைமை என்பதற்குத் தத்தம் வருணத்திற்கும் நிலைமைக்கும் ஓதப்பட்ட ஒழுக்கத்தினை உடையராதல் எனப் பொருள் விரித்துள்ளனர் பரிமேலழகர். வருணாச்சிரம நோக்கிலும் போக்கிலும் வள்ளுவரைக் காணுகின்ற காட்டுகின்ற முயற்சியின் விளைவாகவே இவ் விரிவுரையினைக் கொள்ளுதல் வேண்டும். ஒழுக்கம் வருணத்திற்கு வருணம் பேதப்பட்டு பேதப்படுத்தி ஓதப்படுவதல்ல. பருவகாலக் காற்றினைப்போல நிலைமைக்கு நிலைமை நிலைமாறுகின்ற நெஞ்சுறுதியற்றதல்ல. ஒழுக்கம் ஒருவர்க்கொருவர் ஓதுவதல்ல. ஒவ்வொருவரும் உள்ளூர உணர்ந்து கொள்வது. ஒழுக்கம் யாவர்க்கும் பொதுவானது. பெரியோர்க்கும் உரியது. சிறியோர்க்கும் உரியது. பணக்காரருக்கும் உரியது. பரம ஏழையர்க்கும் உரியது. படித்தவர்க்கும் உரியது. படியாதவர்க்கும் உரியது. இனத்தால் நிறத்தால் தேசத்தால் காலத்தால் வேறுபாடின்றி எல்லார்க்கும் பொதுவானது. பழக்க வழக்கங்கள் மாறுபடலாம். பண்பாடுகள் வேறுபடலாம். ஆசாரங்கள் திரிந்தமையலாம். கட்டுத் திட்டங்கள் கவர்த்த வழியில் கிளை விட்டுச் செல்லலாம். நியமங்கள் நெறிமுறைகள் குறுகலாம்; பெருகலாம். பழக்க வழக்கங்கள் பண்பாடுகள் ஆசாரங்கள் கட்டுத்திட்டங்கள் நியமங்கள் நெறிமுறைகள் ஆகிய செல்வர் செல்வியரைப் பெற்றுச் சீரிளமைத்திறங் குறையாது செங்கோலோச்சும் அன்னையே ஒழுக்கம்.

ஒழுக்கம் ஒழுகு என்ற பகுதியினடியாகப் பிறந்து அம்விகுதி பெற்ற தொழிற் பெயர். இச்சொல் சிறப்பினால் நல்லொழுக்கத்தையே குறிக்கும். வேறுபாடு தெரிவிக்க வேண்டிய இடத்தில் ஒழுக்கம் இழுக்கம் என்றும் நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்றும் பிரிவுபடுத்திக் கூறுகின்றார் வள்ளுவர். ஒழுக்கம் என்று தனித்துச் சொல்வது நல்லொழுக்கத்தையே குறிப்பதாகும்.

எல்லாப் பொருளினும் சிறந்தது உயிர். அவ்வுயிரினும் சிறந்தது உண்டோ? ஆம், உண்டு. உயிரினுஞ் சிறந்தது

ஒழுக்கமுடைமை. உடையப்பருக்கும் ஓடப்பருக்கும் ஒன்றான பொதுவுடைமை ஒழுக்கமுடைமை. உயர்ந்தோர்க்கும் தாழ்ந்தோர்க்கும் சமமாகச் சிறப்பினைத் தருவது இந்த ஒழுக்கமுடைமை. உயிரினும் உயர்வாகப் பேணுதற்குரியது ஒழுக்கம். உயிர் நம்மைவிட்டு அகலாதிருப்பது நம்மைப் பொறுத்தல்ல. ஒழுக்கம் நம்மை விட்டுப் போகாதிருப்பது நம்மைப் பொறுத்தது. அறங்கள் பலவற்றையும் ஆராய்க. அவற்றுள் இம்மைக்கும் மறுமைக்கும் துணையாவது எவ்வறம்? உளங்கொண்டு ஊன்றிப் பார்த்தால் அவ்வறம் ஒழுக்கம் என்பது நன்கு புலப்படும். அழிவு நேராமல் ஒழுக்கம் பேணுக. வருத்தம் பாராமல் பாதுகாக்க.

*ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்*

*பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்*
*தேரினும் அஃதே துணை.*

இல்லம் குடி குலம் என்பன ஒரு பொருள் உடையன; உயர்ந்தவற்றை உணர்த்துவன. ஒழுக்கத்திற்கேற்ற விளைநிலமாக இல்லமும் குடியும் குலமும் இலங்குவதாலே ஒழுக்கம் இற்பிறப்பு என்றும் குடிச் சிறப்பு என்றும் குலப்பெருமை என்றும் பாராட்டப்பெறும். ஒழுக்க சீலர் இற்பிறந்தார் எனவும் குடிப்பிறந்தார் எனவும் போற்றப் பெறுவர். உயர்ந்த குலம் இழிந்த குலம் என்ற பாகுபாடு ஒழுக்கத்தால் ஒழுக்கமின்மையால் உண்டாவது. ஒழுக்கம் உயர்ந்த குலம். இழுக்கம் இழிந்த குலம். ஒழுக்கமுடையவன் இழுக்கமுற்றால் குலத்திலிருந்து இழிந்துவிட்டான் இறங்கிவிட்டான் என்பதல்ல பொருள், மறுபிறப்பு அடைந்துவிட்டான் என்பது பொருள். ஓதுவான் மறைப்பொருளை மறந்தால் மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளலாம். அவன் ஒழுக்கம் குன்றினால் என்னாவது? சிறப்புக் குன்றும் என்று கூறவில்லை. சிறப்பு குறைந்தால் நிறைக்க வழி தேடலாமே. ஓதுவான் ஒழுக்கம் குன்றினால் குடிப் பிறப்பே ஒழியும். பின் நிவர்த்தி மார்க்கம் எங்கிருக்கும்?

*ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்*
*இழிந்த பிறப்பாய் விடும்*

*மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்*
*பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.*

அழுக்காறுடையானுக்கு ஆக்கமில்லை. அதுபோல ஒழுக்கம் இல்லாதவனுக்கு உயர்வு இல்லை. உண்மையான புகழ் ஏணியின் உறுதியான படிகள் ஒழுக்கமாகிய இரும்புப் படிகள். ஏனைய சடசட எனப் பொடிந்து வீழும் போலிப் படிகள். கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உண்பதும் உடுப்பதும் இன்றிக் கெடும். ஒழுக்கம் அற்றவன் வட்டாரமும் அவ்வண்ணமே கெடும்.

*அழுக்கா றுடையான்கண் ஆக்கம் போன்றில்லை*
*ஒழுக்க மிலான்கண் உயர்வு.*

இழுக்கத்தால் தமக்கு எத்துணை இன்னல் ஏற்படுமென்பதை உணரும் உளவலியுடையார் செய்தற்கருமை நோக்கி ஒழுக்கம் கைநெகிழார். ஒழுக்கத்தினால் மேன்மை எய்துவர். ஒழுக்கத்தினால் மேன்மை அடைந்தால் இழுக்கத்தினால் தாழ்மை அடைய வேண்டும் அல்லவா? இழுக்கத்தினால் ஆவது தாழ்மை என்று சொல்லவில்லை. எய்தாப் பழி எய்துவர் என்று உணர்ச்சி ஓலத்தோடு எடுத்துரைக்கின்றார் வள்ளுவர். நல்லொழுக்கம் அறத்திற்கு வித்து. தீயொழுக்கம் மறத்திற்குக் காரணமாய் இம்மையிலும் மறுமையிலும் ஏதம் செய்வது.

*ஒழுக்கத்தில் ஒல்வார் உரவோர் இழுக்கத்தில்*
*ஏதம் படுபாக் கறிந்து*

*ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்*
*எய்துவர் எய்தாப் பழி*

*நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்*
*என்றும் இடும்பை தரும்.*

ஒழுக்கமுடையார் பிறர்க்குத் தீங்கு பயக்கும் சொற்களை மறந்துஞ் சொல்வது முடியாது. அவர் வாய் நல்ல

சொற்களைச் சொல்லிச் சொல்லிப் பழக்கம்பெற்றது. அவர்கள் வாய்ச்சொல் வழுக்குத்தலத்துள் ஊன்றுகோல்போல வழித்துணையாவது.

*ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய*
*வழுக்கியும் வாயாற் சொலல்.*

உயர்ந்தோர் ஒழுகியவாறு ஒழுகும் ஒழுக்கம் கற்க வேண்டும். இதனைக் கல்லாதார் பல நூல்களைக் கற்றாராயினும் அறிவில்லாதவர். மகாத்மா காந்தி பவநகர் சாமல்தாஸ் கல்லூரி மாணவர்களிடையே சொல்லியது இது போழ்து நினைவில் இருத்துதற்குரியது: "ரிஷிகள் புத்தகங்களின்றியே தம் மாணவர்களுக்குக் கல்வி போதித்தார்கள்; சில மந்திரங்களையும் சொல்லிக்கொடுத்தார்கள். மாணவர்கள் அவற்றைப் பேணி நினைவில் வைத்துக் கொண்டு வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகினார்கள். தற்கால மாணவனோ புத்தகக் குவியல் அவனை மூச்சுத் திணறும்படி செய்து விடுகிறது."

*உலகத்தோ டொட்ட வொழுகல் பல கற்றும்*
*கல்லார் அறிவிலாதார்.*



# அருளுடைமை

"அருள் என்னும் அன்பு ஈனும் குழவி" என்பது வள்ளுவர் அருள் வாக்கு. அருளின் பிறப்பிடம் அன்பு. அதன் உறைவிடம் அன்பு. அதன் செழிப்பிடம் அன்பு. அன்பு அரும்பு என்றால் அருள் அது முகிழ்த்து விரிந்த முழு மலர். அன்பு காய் என்றால் அருள் முற்றிப்பழுத்த அற்புதக் கனி. அன்பு அருணோதயம் என்றால் அருள் தினகரன். அன்பு மூலநூல் என்றால் அதன் விரிவுரை அருள். அன்பு வாழ்க்கை என்றால் அதன் புனித வழிபாடு அருள். அன்பு சிந்தனைச் செல்வம் என்றால் அதன் செயல் திறம் அருள். அன்பு இருப்பு என்றால் அதன் இயக்கம் அருள். அன்பு தாய் என்றால் அவள் ஈன்று புறந்தந்த இன்பச் சேய் அருள். இந்த அரும்பும் மலரும், உதய ஒளியும் நிறைந்த ஒளியும், மூலநூலும் விளக்கமும், வாழ்க்கையும் வழிபாடும், சிந்தனையும் செயலும், இருப்பும் இயக்கமும், தாயும் சேயும் இணைந்து திகழ்ந்து நல்லரசு புரியும் வீடு வான்வீட்டின் முன் வீடு. நாடு விண்ணாட்டின் முன் நாடு.

தொடர்பு காரணமாக உள்ளத்தில் உண்டாகும் நெகிழ்ச்சியை அன்பு என்றும், தொடர்பு பற்றாதே யாவரிடத்தும் செல்லும் நேயத்தை அருள் என்றும் பகுத்துக் காட்டுவர் பரிமேலழகர். உற்றார் உறவினரிடம் கொள்ளும் வாஞ்சை அன்பு. உற்றார் உறவினர் என்ற உரிமைத் தொடர்பின்றி எவரிடத்தும் எவ்வுயிரிடத்தும் இயல்பாய்ச் செல்லுங் கருணை அருள்.

அன்புடைமை அதிகாரத்தை இல்லற இயலுள் அமைத்துக் காட்டும் அழகர் அருளுடைமை அதிகாரத்தை துறவற இயலுள் அமைத்துக் காட்டுகின்றார். அதற்குக் காரணமும் சுட்டுகின்றார். "இல்லறத்திற்கு அன்புடைமை போல இது (அருளுடைமை) துறவறத்திற்குச் சிறத்தலின் முற்படக் கூறப்பட்டது" என்பர் அவ்வுரையாசிரியர்.

அருளற்ற உலகம் இருளுற்ற உலகம்; மருளுற்று மண் புகுந்து மாயும் உலகம். அருளாளரே உலகம் காக்கும்

அரிய காவலர். திருக்குறளின் பாயிரப் பகுதியிலேயே இந்த அருளாளரைப்பற்றிய இனிய பேச்சு எழுந்துள்ளது. நீத்தார் பெருமை என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் துறவறத்தாரின் அருளாண்மையையே விதந்தோதுகின்றார். திருக்குறள் என்னும் கலைக் கோவிலின் உவின்பெறு கோபுர வாயில்கள் நான்கு. அவை: கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலி யுறுத்தல். இக்கோபுர வாயில்கள் குறள்கோவிலுக்கு அழகு செய்யும் வாயில்கள் மட்டுமல்ல. அரண் செய்யும் வாயில்கள்; உரஞ் செய்யும் வாயில்கள்.

பொன்னும் பொருளும் நிலமும் வீடும் வேறுபல செல்வங்களும் கயவர்களிடத்தும் குவிந்துள்ளன. சிறந்த செல்வங்கள் இவையல்ல. செல்வங்கள் பலவற்றுள் ஆராய்ந்தெடுக்கப் பெற்ற அருஞ் செல்வம் அருளால் வரும் செல்வம். அருட் செல்வமே அரும்பெருஞ் செல்வம். பொருட் செல்வம் புல்லர்களிடத்தும் பொருந்துவதுண்டு.

*பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்*
*என்னை நாடிய என்னருள் நாதனே!*

*உன்னை நாடுவன் உன்னருள் தூவெளி*
*தன்னை நாடுவன் தன்னந் தனியனே!*

என இதய ஆழத்திலிருந்து இன்னிசை பாடி தங்கள் வாழ்க்கையையே இந்த இதய கீதத்திற்கு ஒத்திசைக்கச் செய்யும் தவச் செல்வரிடமே இந்த அருட் செல்வம் உண்டு. இத்தவச் செல்வர் அருளையே தமக்கு உற்ற துணையாக அடைந்துகொண்டவர். இவர்கள் நெஞ்சம் அருள் சேர்ந்த நெஞ்சம். எனவே இவர்களைச் சூழ்ந்த உலகம் இருளற்ற உலகம்; இடரற்ற உலகம்; இன்ப ஒளி பரந்த எழிலார் உலகம்.

*அருட்செல்வம் செல்வத்துள் செல்வம்; பொருட்செல்வம்*
*பூரியார் கண்ணும் உள.*

*நல்லாற்றான் நாடி அருளாள்க; பல்லாற்றான்*
*தேரினும் அஃதே துணை.*

*அருள்சேர்ந்த நெஞ்சினோர்க்கில்லை இருள்சேர்ந்த*
*இன்னா உலகம் புகல்.*

அருளாளர் பிற உயிர்களைப் பேணுவதிலேயே கருத்தா யிருப்பர். தம் உயிர்க்கு உறுதி எண்ணுர். அவருடைய அருள் உள்ளம் அஞ்சாத உள்ளம். தீமையை எதிர்த்து நலஞ் செய்யும் திண்ணிய உள்ளம். பொருள் இல்லையேல் புறவாழ்க்கை இல்லை. அதுவே போல அருள் இல்லையேல் அக வாழ்க்கை இல்லை. பொருளற்றவர் பொருள் உற்றவர் ஆகலாம். அருளற்றவர் அருளுற்றவராதல் அரிதென்க. எனவே, பொருளைப் பேணுவதினும் பெருங் கருத்துடன் அருளைப் பேணுதல் வேண்டும்.

*மன்னுயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு இல் என்ப*
*தன்னுயிர் அஞ்சும் வினை.*

*அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளிலார்க்கு*
*இவ்வுலகம் இல்லாகி யாங்கு.*

*பொருளற்றார் பூப்பர் ஒருகால்; அருளற்றார்*
*அற்றார்; மற்று ஆதல் அரிது.*



# கிறிஸ்தவக் கவிஞர்

முற்காலக் கத்தோலிக்குச் செய்யுட்களில் வரலாற்று வரிசையில் வீரமாமுனிவர்தம் செய்யுட்களை முதற்கண் வைத்து எண்ண வேண்டும். முனிவரியற்றிய தேம்பாவணி 90 சந்த பேதங்களையுடையது. 3615 விருத்தப்பாக்களைக் கொண்டது. தொடர் நிலைச் செய்யுள் என்று பெயர் பெறும் காப்பியமாய் அமைந்தது. இது 1853-ல் புதுச்சேரி யில் அச்சிடப்பெற்றது. இது பழைய ஏற்பாட்டின் வரலாறுகளையும் சத்திய வேதக் கொள்கைகளையும் உள்

ளடக்கி யேசுபரனின் வளர்ப்புத் தந்தை சூசைமா முனிவ ரின் கதையை அறமுதல் விளங்கச் சொல்லும் தன்மையது. திருக்குறளின் நறுமணமும் சிந்தாமணியின் சிந்தைக்கினிய கற்பனை அழகும் கலைமலிந்த கம்பரின் கவிநலமும் ஒருங் கியைந்த இவ்வருபெரும் காப்பியம் தலைசிறந்த தமிழ்க் காப்பியங்கள் நான்கனுள் ஒன்றாய் நலமுறத் திகழ்கின்றது.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் சைவ வைணவத் தலங்களை அடைந்து அவர்தம் தெய்வங்களைப் போற்றிப் பாசுரங்கள் பாடினர். அவர் பாடும் பான்மையைப் பின் பற்றியேதான் நம் அடிகளாரும் பாடினர். அடிகளார் ஏலாக்குறிச்சியில் எழுந்தருளிய அடைக்கல மாதாவை கலம்பகத்தால் பாடினர். கவிசொல்லவல்ல நல்வித்தைக் கும் நுண்மாண் புலமைக்கும் பக்திப் பரவசத்திற்கும் இடமாக இருக்கும் கலம்பகம் முனிவரின் பாவியற்றும் பேராற்றலாலும் சுவையுறத் தெளிந்த நன்னெஞ்சத்துயர் வாலும் கருத்துப் பொலிவும் நாதப் பெருமிதமும் வாசகத் தூய்மையும் பெற்று வாழ்கின்றது.

*கனை பூத்த சோணாட்டுக்*
*காவிரியின் வடகரையில்*
*சினைபூத்த நிழற் பொழில்வாய்*
*சிங்கநெடும் கொடிநிழற்றும்*
*திருக்காவ லூரகத்துத்*
*திகழ் ஒளிவாய் மணிக்கோயில்*
*அருட்காவல் இயற்றிநமை*
*அளிப்பது நின் தயை ஆமோ?*

என்று அன்னையின் தயைப் பெருக்கை ஆர்வம் மிகுந்து இசைக்கின்றார்.

*போதலரும் தண்சினைக்காப்*
*பூங்காவல் ஊர்க்கரசி*
*ஆதவனைத் தூசாய்*
*அணிந்தனள்காண் அம்மானை*

என்று ஒரு பெண் பேசுவதாகவும்

*ஆதவனைத் தூசாய்*
*அணிந்தனள் என்றுமாயின்*
*மாதர் அரும் மேனிநலம்*
*வாடாதோ அம்மானை*

என்று இன்னொரு பெண் வினவுவதாகவும்

*மாதருள் நீர் மூழ்கிரவி*
*வாய்குளிரும் அம்மானை*

என்று மற்றொரு பெண் சமர்த்தித்துக் கூறுவதாகவும் அமைத்துள்ள அம்மானைச் செய்யுளும் இவைபோன்ற பிறவும் கற்பார்க்குக் கழிபேரின்பம் பயப்பன.

கித்தேரியம்மாள் அம்மானை பாடுவதற்கும் மனனம் செய்வதற்கும் எளிதாய் அமைந்த ஜனரஞ்சகமான கவிதை. போர்த்துக்கல் நாட்டில் பொம்பேரு குன்றில் வேதசாட்சியாக உயிர் நீத்த அர்ச். கித்தேரியம்மாளின் வணக்கத்தைப் பரப்பும் சாதனமாக அது இயற்றப்பெற்றது. "பேதையர்க்கு ஓர் அம்மானை பேதையும் நான் பாடிடுவேன்" என்று கவிஞர் கூறுவது அவையடக்கம் அறிஞர்க்கும் விருந்தாம் விழுப்பொருளும் பொருந்தப்பெற்றது இந்த அம்மானை.

அடைக்கலநாயகி கலிவெண்பா புலவர் பக்திமையால் புனைந்த பாமாலை, அதில்

*இன்பருளிப் பூநிழல் சூழ்*
*இயைகாவல் ஊரகத்தே*
*அன்பருளி நீ எனையும்*
*அடைக்கலம் கொண் டாயலையோ ?*

என்று அகங்கனிந்து உரைக்கின்றார். அடைக்கலமாலை உலாவும் இத்தகைய உருக்கம் நிறைந்ததே.

*அடிசேர்ந்தேன் கண்டேன் அணிந்தேன் அடிபணிந்தேன்*
*மிடிசேர்ந்தேன் பேரின்ப வெள்ளம்—முடியாக*
*குளித்தேன் துதித்தேன் குளிர்ந்தேன் மலர்த்தாள்*
*துளித்தேன் சுவைத்தேன் சுகித்தேன் களித்தேனே*

என அன்னையின் அருள் வெள்ளத்தில் தாம் மூழ்கிய தன்மையை அநுபவ உணர்ச்சியோடு அறிவிக்கின்றார். அன்னை அழுங்கல் அந்தாதி திருப்பாடல்களின் நாடகத்தை ஒட்டி இயற்றப் பட்டதாகவேண்டும்.

அந்தோனிக்குட்டி அண்ணாவியார் வீரமாமுனிவர் காலத்தவர் என்பர். தூத்துக்குடிக் கடற்கரையை அடுத்த பகுதிகளில் இன்றளவும் அண்ணாவி என்ற சொல் ஆசிரியரை உணர்த்துவதாக உள்ளது. இவர் தொழிலாள ஆசிரியரோ? அதுவும் உறுதியில்லை. இவரைத் தூத்துக் குடிவாசி என்பர் சிலர். மணவையம் பதியினர் என்பர் வேறு சிலர் திருநெல்வேலியைச் சார்ந்த மணப்பாறைக் காரர் என்று கூறுவது பொருந்தவில்லை. இவர் பரவர் என்பாரும் உளர். ஈழுவர் என்பாரும் உளர். இவருடைய கவிதைகளில் இவரது ஊர் பேர் குடும்பநிலை தொழில் முதலியன பற்றிய அகச்சான்றில்லை.

*மக்களும் வேண்டாம் மனைவியும் வேண்டாம்*
*வாழ்வொடு செல்வமும் வேண்டாம்*
*மாடமும் வேண்டாம் கூடமும் வேண்டாம்*
*மன்னவர் வரிசையும் வேண்டாம்*
*ஒக்கலும் வேண்டாம் கைப்பொருள் வேண்டாம்*
*உண்பதும் உடுப்பதும் வேண்டாம்*
*ஊருமோ வேண்டாம் பேருமோ வேண்டாம்*
*உடம்பும் வேண்டாமிதே உண்மை*

என்று பாடும் பக்குவம் பெற்ற புலவர் பெருமானுக்குத் தம் ஊரும் பேரும் உற்ற தொழில் பற்றிய கவலை இல்லாதது சரிதான். ஆயினும் சரித்திராசிரியர்களைக்கொண்டு அவரைப்பற்றிய வரலாறு அறிய முடியாதிருப்பது மிகவும் வருந்தத்தக்கதே.

மேற்குறித்த இப்பாவிலே அண்ணாவியார் தொடர்ந்து கூறுகின்றார்:

*தக்கஉன் கமலச் சரண் இணை வேண்டும்*
*சந்ததம் உனைத் தொழ வேண்டும்*
*தவஞ்செயப் பலமும் சக்தியும் வேண்டும்*
*சகல பாவங்களைத் தள்ளப்*

*பக்குவம் வேண்டும் நின் மறைப்பொருளை*
*பாடவும் படிக்கவும் வேண்டும்*
*பரகதி வேண்டும் மரிய நாயகிகைப்*
*பாலனே யேசு நாயகனே !*

பாரதியார் "நமக்குத் தொழில் கவிதை" என்று நயந்துரைக்கின்றார். இப்புலவர் பெருந்தகையாரும் "நின் மறைப் பொருளைப் பாடவும் படிக்கவும் வேண்டும்" என்று அகங்குழைந்து ஆசிக்கின்றார்.

அன்னாவியார் ஒழுக்கவழி விலகித் திரிந்த காரணத்தால் குருக்கள் இவரைத் தம் இனத்தால் நீக்கி வைத்தனர் என்றும் இவர் ஓர் அற்புத வழியால் தம் இழுக்குடை நடையைத் திருத்தி ஒழிந்த தம் வாழுநாளை இரட்சகர் பிரானைப் பாடும் பணியில் கழித்தனர் என்றும் கர்ண பரம்பரையாய்க் கூறுவர். தேவமாதாவிடம் மைந்தனைத் தரும்படி கேட்டல் என்ற தலைப்பிலே இவர் பாடுகின்ற கீர்த்தனையில் ஒரு பகுதி இச்செய்தியை வலியுறுத்துவது போல வந்தமைகின்றது.

*ஞான சொரூபியான நல்ல மகவைப் பாவ*
*ஈனன் தொட வொண்ணுதென் றெண்ணுகிறீரோ-தாயே*
*ஏனை உயிரும் காக்கும் ஞானக் குழந்தையினுல்*
*இரக்கப் புனலில் நன்ருய்க் குளித்து முழுகிப்பாவ*
*அழுக்கைத் துடைத்து மகா ஒழுக்கத்துடனே வந்தேன்*

என்று சொல்லித் தாயின் செங்கைமேவும் திருமைந்தனைரைத் தரத் தயை செய்யத் தயவாய் வேண்டுகின்றார்.

இவர் திருமீட்பர் மீது பாடிய பாடல் திரட்டிற்குக் கிறிஸ்து சங்கீதம் என்று பெயர் இட்டிருக்கிறார். இத்திரட்டில் பேரின்பக் காதல், பாலத்தியானம், பச்சாத்தாபம், தன்மேற் குற்றம் சுமத்தல், ஆசைப்பத்து, அருள் வாசகம், யேசுநாதர் மரணம் திருப்புகழ், ஆனந்த மஞ்சரி கீர்த்தனை முதலியன அடங்கியுள்ளன.

இப்பாக்களைப் பண்ணேடு பாடுங்கால் மாணிக்க வாசகர் ராமலிங்கர் அருணகிரியார் முதலிய பாவலர்கள்

கவிதையின் சந்த இனிமை தொனிக்கக் கேட்போம்; இவர்தம் கவிதையின் கனிவையும் காண்போம்.

*வேடத்தால் தர்ப்பணத்தால்*
*வெண்ணீற்றால் எக்கியத்தால்*
*தேடத்தான் கிட்டாத*
*தேவ தரிசனத்தான்*
*ஆறெழுத்தாய் எட்டெழுத்தாய்*
*ஐந்தெழுத்தாய் மூன்றெழுத்தாய்*
*வேறெழுத்தாய் ஓதும்*
*விதிக்குள் அடங்காதான்*

என்பன போன்ற பாக்கள் பேரின்பக் காதல் கண்ணிகள் தாயுமானவர் சுவாமிகளின் பராபரக் கண்ணியை நினைவூட்டுவன. அண்ணாவியாரின் சைவ நூற் பயிற்சியைப் புலப்படுத்துவன.

யேசுபரன், போலி வேடத்தாலும் பிதிர்களுக்குச் செலுத்தும் எள்நீர் முதலியவற்றின் நிவேதனத்தாலும் விபூதிப் பூச்சாலும் வேள்வியாலும் தேடி அடையப் படுபவர் அல்லர்.

"நமக்குமாரராய" "ஓம் நம சிவாய நம" "நமோ நாராயணாய" "நமசிவாய" "அஉம்" என்னும் ஆறெழுத்து மந்திரம் எட்டெழுத்து மந்திரம் ஐந்தெழுத்து மந்திரம் மூன்றெழுத்து மந்திரம் ஆகிய மந்திரங்களுள் அடக்கிக் கூறப்படாத வாக்கு மனத்திற்கு எட்டாதவர் யேசுபரன். இத்தகு கருத்துக்கள் அடங்கிய கண்ணிகள் பலப்பல.

புதுச்சேரியைச் சார்ந்த முற்காலப் புலவர்களிலே முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர் இருவர். அவர்கள் செ. சவராயலு நாயகரும் சாமிநாத பிள்ளையும் ஆவர்.

சவராயலு நாயகர் மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடத்தில் தேம்பாவணியையும் திருக்காவலூர்க் கலம்பகத்தையும் முறையாகப் பயின்றவர். தேம்பாவணிப் பிரசங்க வல்லுநர். அவர் பிரசங்கம் சொல்லும்

முன்னும் பின்னும் கூறிய கவிதையே அவரது செய்யு ளாக்கும் திறனை விளக்கப் போதியன.

*நச்சரவான சோகி | னவையற மனுவாய் வந்த*
*அச்சுதன் அடியைப் போற்றி | அருள்வீர முனிவன் தந்த*
*இச்செகமுழுதும் ஏத்தும் | எழில்தேம்பா வணியின் தூயர்*
*உச்சிதப் பொருளை நாயேன் | உணர்ந்தவா றுரைப்பன்*
*[கேளீ*

*துற்பலச் சிறியே னுக்கு*
*தூயவிக் கதாப்ரசங்கஞ்*
*சொற்பலம் தந்துகாத்த*
*சொல்லரும வல்லபேசு*
*தற்பரா பரற்கும் ஈதைச்*
*சாற்றச் செய் வித்தோருக்கும்*
*அற்புடன் வந்து கேட்டே*
*அகங் களித் தோர்க்குந் தோத்ரம்*

பாடற்றிரட்டு என்ற மகுடமிட்டு சவரிராயலு நாயகர் சமயோசிதமாய் இயற்றிய அநேக பாடல்கள், கவர்னர்கள் குருக்கள் மேற்றிராணியார்கள் புலவர்கள் இவர்களைப்பற்றி நாயகர் பாடிய தோத்திரப்பாக்கள் ஆகிய பல நூற்றுக் கணக்கான செய்யுட்கள் அடங்கிய ஒரு நூல் உண்டு. அதில் அப்புலவர் பாடிய தேவமாதாவின் பேரின்பச் சதகம் காணுமாறில்லை.

சாமிநாத பிள்ளையவர்கள் இயற்றிய யேசுநாதர் பிள்ளைத் தமிழும் நசரைக் கலம்பகமும் புத்தக வடிவில் இருப்பது நம் பாக்கியமே. யேசுநாதர் பிள்ளைத் தமிழை ஏனைய சில புலவரும் பாடியிருத்தல் கூடும். பிள்ளையவர் கள் பாடியுள்ள பிள்ளைத்தமிழ் செந்தமிழ் நலங்கொழிக்கும் பைந்தமிழ்ப் பாமாலை.

*மின்னல் நேரும் பாலன் பாதம்*
*விபுதர் முத்தம் இட்டிட*
*மினணிந்த அன்னை ஒகை*
*விஞ்ச முத்தம் இட்டிட*

*சொன்ன வேத நீதமுற்ற*
*தூயகுசை மாமுனி*
*துதியுரைத்தும் பொற்பதத்தைத்*
*தொழுது முத்தம் இட்டிட*
*துன்ன ஆயர் வந்து கண்டு*
*தூய முத்தம் இட்டிட*
*தோன்றல் மூவர் வந்து கண்டு*
*தொழுது முத்தம் இட்டிட*
*பன்னரும் திறத்தை யுற்ற*
*பாத முத்தம் தருகவே*
*பயனளித்த முத்தன் முத்துன்*
*பாத முத்தம் தருகவே*

என்பது போன்ற பிள்ளைத் தமிழ் பாக்கள் இழுமென் மொழியால் விழுமிய தன்மையுடையதாய் அமைந்துள்ளன.

நசரைக் கலம்பகம் 1885-ம் ஆண்டில் ம. சா. இயாகப்பப் பிள்ளையவர்கள் வெளியிட்டுள்ள பதிப்பில் சாமிநாத பிள்ளையவர்களால் இந்நூல் இயற்றப் பெற்ற செய்தி தெளிவாக இருப்பவும், இது வீரமாமுனிவரால் இயற்றப் பட்டிருக்கலாம் என்ற ஐயம் ஏற்பட்டது எதற்கோ? பிள்ளையவர்கள் இயற்றிய கவிதை நூல்களில் ஞானதிக்க ராயர் காப்பியமே சிறந்தது என்டர்.

இலக்கிய வரலாற்று நூற்களிலே முற்காலக் கத்தோலிக்கப் புலவர்களின் சேவைக்குத் தக்க இடமும் புகழும் இல்லை. பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் "தமிழ் இலக்கிய வரலாற்" றிலே வீரமா முனிவரைப்பற்றி எழுதுங்கால் "இவர் பிரான்சு தேசத்திலிருந்து தென் தமிழ் நாட்டிற்கு வந்ததாகக்" குறிக்கின்றார். "தேம்பாவணி இயேசுவின் வாழ்க்கையைக் கூறும் பெருங்காப்பியம்" என்கிறார். இந்நூலின் திருத்திய மூன்றும் பதிப்பிலும் இப் பிழைகள் களையப்படாதிருக்கின்றன.

கத்தோலிக்கமும் தமிழும் என்ற விரிவான நூல் இயற்ற வேண்டும். கத்தோலிக்கப் பழம் புலவர்கள் புதுக்

கவிஞர்கள் இவர்களுடைய செய்யுட்களை விமர்சனம் செய்து வெளியிட வேண்டும். தஞ்சை அருளப்ப நாவலர், திருச்சி தோமாஸ் புலவர், மணவை இன்ப கவிராயர், சென்னை ஜெகராவு முதலியார், தூத்துக்குடி எம். எ. பீரிஸ் போன்ற புலவர்களின் வரலாறுகளையும் அவர்தம் கவிதைகளையும் வகைப்படுத்தி வெளியிட வேண்டும்.

சில நூல்கள் குறிப்பளவில் இருக்கின்றன. அவற்றைத் தேடிக் காணவேண்டும். திருக்காவலூர்க் கலம்பக உரையில் அருளப்ப நாவலர் மாதா பிள்ளைத் தமிழில் இருந்து மேற்கோள் காட்டுகின்றார். இப்பிள்ளைத் தமிழ் இப்போது யாண்டுளதோ? யாழ்ப்பாணம், தூத்துக்குடி, திருச்சி, தஞ்சை, புதுவை, சென்னை முதலிய இடங்களில் அச்சிடப்பெற்று இன்று கிடைப்பதற்கரிதாய் இருக்கும் நூல்கள் நவமான முறையில் வெளியிடப் பெறுங் காலம் விரைவில் வருவதாக.

உள்ளத்தின் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும். இந்த அடிப்படை உண்மைக்கேற்ப கத்தோலிக்க உண்மையொளியுடைய புலவர் மணிகள் நம் நாட்டில் தோன்றி கத்தோலிக்க உண்மையொளியைப் பரப்பியுள்ளனர். பரப்பி வருகின்றனர் உண்மை கடவுளின் சொத்து. அவ்வுண்மையை வழங்கும் உரிமை திருச்சபையின் உடைமை. இதனை உணர்ந்தால் கத்தோலிக்கப் புலவர்களின் சேவையைப் போற்றுவோம். அவர் சேவையின் பெருமையை அறிந்து அவரைப் பேணுவோம்.



# மணப்பாட்டு மகா வித்வான்

அலைகள் பாடும் அருமையும் அறிஞர் பாடும் பெருமையும் ஒருங்கிசைந்த அழகமர் திருநகர் மணப்பாடு. இது திருநெல்வேலி ஜில்லாவில் தென் கடற்கரையில் பிரசித்திபெற்ற ஊர்களுள் ஒன்று. பாண்டி மன்னர் காலத்தில் பெரிய துறைமுகப் பட்டினம்; அயல் நாடுகளோடு வணிக உறவு கொண்டிருந்த வளமார்ந்த நகரம். மணவை யம்பதி, திருமறைப் பெரியோர்களான சவேரியார் வீரமா முனிவர் ஆகயோர்க்கு உறைவிடமாகத் திகழ்ந்த செப்பம் உடையது. அந்தோனிக்குட்டி அண்ணாவியார் இன்பகவி ராயர் ஆகிய புலவர்களை ஈன்றெடுத்த புகழுடையது.

இன்ப கவிஞரின் இயற்பெயர் சவியேர் ஹென்றி லெயோன். இவரது தந்தையார் தாமஸ் ஹென்றி லெயோன் அடப்பனார். லெயோன் அடப்பனார் மணவை நகர்க் காவலர், வழி வழி சிறந்த மாபெரும் மரபினர். ஹென்றி லெயோன் சாமர்த்தியமாகவும் இனிமையாகவும் பாடுகின்ற பான்மை கண்ட அறிஞர் இவரை இன்பகவி என அழைத்துப் போற்றினர். பரத குலத் தலைவர் தொன் கபிரியேல் வாஸ் கோமஸ் இவரைத் தமது அவைக்களப் புலவர் ஆக்கிக்கொண்டனர் அட்டாவதானம் என்றபட்டமும் இவர் பெயரோடு சேர்த்து வழங்கப் பெறுவதுண்டு.

இன்ப கவிராயர் ஊருக்கு ஊர் பயணஞ் செய்து செய்யுட் பிரசங்கம் நிகழ்த்தித் தன் கலைத் திறனை சபைகளில் நிலைநாட்டினர். அவ்வவ்வூரிலுள்ள புரவலர் இப் பாவலர்க்கு விருதும் பரிசும் விருப்புடன் அளித்தனர். புலவர் இவரது கவிதைத் திறத்தைக் கண்டு மகிழ்ந்தனர். இச்செய்தியை

*"செவ்விதழ்க் கமலவயல் திகழும்யாழ்ப் பாணநகர்*
*சென்று சங்கத்தின மிக்க*
*செய்யுட்பிர சங்கமது செய்துமச் சங்கச்*
*சிரேஷ்டர்முன் சீர்த்தி பெற்றேன்*

*செப்பரிய தஞ்சைவளர் தாத்தோஜி மந்திரியால்*
*சிவிகை பிரதிஷ்டை யுற்றேன்*
*சீர்பெருகு பெங்களூர் மைசூரிரண்டிலும்*
*செயராஜ விருது பெற்றேன்"*

எனக் கவிஞர் உரைத்த பாடல் பகுதியே வற்புறுத்து கின்றது.

இன்பகவி எட்டையபுரம் சென்றிருந்தார். எட்டைய பூபதி இவருக்குத் தகுந்த மரியாதை தரவில்லை. சபையில் அரசர் அமர்ந்திருந்தார். அவரது சம்பிரதி (அமைச்சர்) ஆங்கிருந்தார். புலவருக்கோ இருக்க ஆசனம் கொடுக்க வில்லை. தன் மானத்திற்கு இழுக்கு ஏற்படும் நிலையில் நின்று கொண்டிருக்க ஒருப்படுவாரா கவிஞர்? துணிகர மாக அரசனை அறைகூவிக் கேட்கின்றார்.

*கங்கை குலத்தில் கனகமணி யாயுதித்த*
*சங்கரக் குமார நயாகிதியே—உங்களுடை*
*சம்பிரதிக் கந்தவிடம் தங்களுக்கோ இந்தவிடம்*
*இன்பகவிக் கெங்கே இடம்?*

புலவருடைய உரிமை முழக்கத்திற்குப் பின் அவ ருக்கு எங்கே இடம்? அரசன் உள்ளத்தில் இடம். அமைச்சர் உள்ளத்தில் இடம். அவையினர் உள்ளத்துள் ளெல்லாம் இடம். அரசனுடைய பேரன்பிற்குப் பாத்திர மான புலவர் பற்பல பரிசுகள் பெற்றுப் பெருமகிழ்வுற்றார்

பாவலர் தஞ்சைக்குச் சென்றிருந்தார். அங்கே ஆட்சி செய்த சரபோஜி மகாராஜாவின் மந்திரி தாதோஜி இவரை நன்கு உபசரித்தார். தனது பல்லக்கினையே புலவர்க்குப் பரிசாக அளித்தார். நீர்வளம் நிலவளம் பெருகிய தஞ்சை வட்டாரத்தில் இவர் வெகு நாட்கள் தங்கியிருந்தார். நெடுங் காலம் ஊருக்குத் திரும்பவில்லையாதலால் இவர் இறந்து விட்டாரோ என்ற வதந்தி தூத்துக்குடிப் பகுதியை அடுத் துப் பரவியது. இவர் திடீரென ஒருநாள் தூத்துக்குடிக்குத் திரும்பியவராய் பரத குலாதிபன் தோன் கஸ்பார் வாஸ் சபா மண்டபத்துள் தோன்றியதும் அதிபர் ஆச்சரிய

முற்றவராக "புலவரே! இன்றுகாறும் எங்குற்றீர்?" என்று கேட்டார். புலவர் சமத்காரம் தோன்ற வேடிக்கை யாகப் பதில் இறுத்தார்.

"பெலத்ததொரு வானவரை முனிவரரை
உலகிலுள்ள பெரியோர் தம்மை
அலைத்துவிடும் எமராயன் முன்சென்றேன்
எனை அவன் பார்த் தெவர்காண் என்றான்
தலத்திலுயர் தொன்கஸ்பார் அந்தோணி
வாஸ்வாசல் வித்வான் என்றேன்
மலைத்தவனும் உமதுநகர்க் கேகுமென்றான்
நானும் இதோ வந்திட்டேனே."

கீழ்க்கரை மம்மது காசிம் மரைக்காயர் அவர்கள் மாளிகையில் கூடிய புலவர் பெருங் கூட்டத்தில் இன்ப கவிராயர் ஒருநாள் உரை நிகழ்த்திக்கொண்டிருந்தார். அப் பொழுது அக்கூட்டத்தில் ஒரு புலவர் இவரை ஏளனம் செய்யும்பொருட்டு ஈரர்த்தமுள்ள ஒரு கேள்வி கேட்டார். "ஐயா! கட்செவிக்குக் காதுண்டா? ஒன்றில் உண் டென்று சொல்லுங்கள், அல்லது இல்லை என்னுங்கள்." புலவர் உடனே பாட்டால் பதிலிறுத்தார். கட்செவிக்குக் காதில்லை. ஏன் இல்லை தெரியுமா? காசிம் மரைக்காயர் புகழை மன்னரும் முனிவரும் சித்தரும் இசைந்துபாடி "இப்படி ஒரு புருடன் இல்லை என்று சொல்லிச் சிரம் அசைப்பார்கள். அவர்கள் சிரசின் அசைப்பைப் பார்ப் பதற்காக பிரம்மா கட்செவிக்குக் காது படைக்கவில்லை."

மாதருவைப் பழித்த கொடை
மம்மது காசிம் புகழை மன்னர் மன்னர்
ஏதமறு முனிவர் சித்தர் கின்னரர்
கிம்புருடர்களும் இசைந்து பாடி
ஆதரையில் இப்படி ஓர் புருடனிலை
எனுஞ் சிரசில் அசைப்பை நோக்கக்
காதரவுக்கில்லாமல் படைத்தனனே
கடிகமழும் கமலத் தோனே.

கடல் கடந்து சென்ற கவிஞர் இலங்கைத் தீவில் இசைக் குயிலாகத் திரிந்து பல பிரபுக்களைக் கண்டு பாட்

டிசைத்து வந்தார். புலவர் எங்கிலேயிலிருந்தபோதும் பாடுக என்றதும் பாடுவார். ஆசு கவிகள் அனுட்பிசகாமல் அவருடைய நாவிலே நர்த்தனமாடும். யாழ்ப்பாணத்தில் கச்சேரி முதலியார் எனப்பட்ட பிலிப்பு ரொட்ரிக்கோ முத்துக்கிருஷ்ண அவர்கள் புலவரைப் பேணிப் போற்றிய வள்ளலாக விளங்கினார்கள். இன்ப கவிராயர் தனக்கு ஆதரவு நல்கிய பேருபகாரியான முதலியார் மீது குறவஞ்சி நாடகம் இயற்றி என்றும் வாடாத அந்த இலக்கிய மாலையை அவருக்குச் சூட்டினார்.

இலங்கையிலிருந்து மீண்ட மகா வித்வான் தம் சொந்தப்பதியாகிய மணவையம்பதியில் 1835-ம் ஆண்டு காலஞ்சென்றார்.



# இலக்ஷ்மண பிள்ளை

இலக்ஷ்மண பிள்ளையின் தந்தையார், திரவியம் பிள்ளை. திருவாங்கூரில் 'வலிய எழுத்து அதிகாரி' என்ற Accountant General அலுவல் பார்த்து வந்தார். குடும்பம் பரம்பரையான சைவக் குடும்பம். திரவியம் பிள்ளை இல்லத்தில் தினமும் பூஜை நடக்கும். தந்தை தேவார திருவாசகங்களை ஓதுவார். பிள்ளைகளும் பக்தி சிரத்தையோடு உடன் சேர்ந்து உள்ளம் உருகப் பாடுவர். இலக்ஷ்மண பிள்ளை பிற்காலத்தில் ஒவ்வொரு விசேஷ நாளிலும் முக்கியமாகப் பாடுகின்ற 'சொற்றுணை வேதியன்', 'காதலாகி' முதலிய தோத்திரப் பாக்கள் பிள்ளைப் பருவத்தில் தம் தந்தையாரோடு பயபக்தியுடன் பாடிய பாக்களே.

தமது மைந்தனுக்குத் தெய்வ பக்தியோடு இசை ஆர்வம் கிளைத்தெழுந்திருப்பதைக் கண்ட தந்தையார் மகிழ்ந்தார். பையனுக்கு ஏழு வயதில் தக்க ஆசிரியர்களைக்

கொண்டு முறையான இசைப் பயிற்சி அளித்தார். ஏழு ஆண்டுகள் இசையினை விரும்பிக் கற்றதின் விளைவாக தனது 14-வது வயதில் இலக்ஷ்மண பிள்ளை தம் தந்தையின் பூர்வீக பதியாகிய திருச்செந்தூர் திருமுருகன்மீது ஒரு கீர்த்தனம் இயற்றி அதனைப் பாதகாணிக்கையாக வைத்துப் பணிந்தனர்.

இசையில் இயல்பாடமைந்த விருப்பத்தால் இவர் பள்ளிக்கூடப் படிப்பை மறக்கவில்லை; இவர் பள்ளிப் படிப்பில் காட்டிய பேரூக்கம் மாணவர்களால் மேற்கொள்ளத் தகுவது. 13 வயதில் எஸ். எஸ். எல். சி., 17 வயதில் பி. ஏ. புகழுடன் தேர்ந்து பரிசு பெற்றார். கல்லூரித் தலைவர் டாக்டர் ஹார்வி இவரது ஆங்கிலப் புலமையையும் தர்க்க நுட்பத்தையும் பாராட்டியுள்ளார்.

"ஜமாபந்தி" தணிக்கையாளர் வேலையில் மாதம் ரூபாய் 40 சம்பளத்தில் வாழ்க்கை தொடங்கினார். விடா முயற்சியாலும் வேலைத்திறத்தாலும் படிப்படியாக உத்தியோக உயர்வுபெற்று மாதம் ரூபாய் 250 சம்பளத்தில் மேஜர் கஜானா ஆபீசர் உத்தியோகம் பெற்றுக் கீர்த்தியுடன் அதை நடத்தினார்.

*'பெரியோர் அடைந்துள பீடார் நிலைகள்*
*ஒரு நாள் முயற்சியால் ஒன்றியவல்ல*
*பலநாள் பிறர்படுத்துறங்கும் காலை*
*இரவில் முயன்றதால் எய்திய வைகளே'*

என்ற ஆன்றோர் அநுபவ வாக்கிற்கேற்ப இவர் உழைப்பால் உயர்ந்த உத்தமர்.

பிள்ளையவர்களின் 27-வது வயதில் என்றும் மறக்க வியலாத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அவர் அருவிக்கரை என்ற ஊருக்குச் சென்றிருந்தார். அங்கே ஆற்றில் நீராடப் போயிருந்தார். பெரும் வெள்ளத்தில் அகப்பட்டுத் திண்டாடினார். உயிர் இழக்க இருந்த தருணத்தில் நம்பிக்கை இழக்கவில்லை. இறைவனை நோக்கி இறைஞ்சினார். எவ்வாறு தப்பினர் என்று அறிய முடியாத நிலையில் கடவுள்

அருளால் கரை சேர்ந்தார். "அன்று வந்து கரையேற்றி" என்று ஆரம்பிக்கும் பாட்டு இந்நிகழ்ச்சியைக் குறித்து எழுந்ததே. தோத்திரத்தில் மயங்காத இலக்ஷ்மண பிள்ளை துன்பத்தில் சலிக்கவில்லை. அவருக்கு வாழ்க்கையில் நேர்ந்த இடர்கள் யாவும் இறையடி சேர்க்கும் தொடர்களாகவே அமைந்தன. சுடச்சுட ஒளிரும் பொன்போல அவர் துன்பத்தால் புடம்போடப்பெற்றுப் புத்தொளியுடன் வாழ்ந்தார். இவரது அருமந்த மக்களில் ஒருவர் இறந்தனர். இது பிள்ளையவர்களுக்குப் பெருந் துயர் தந்தது. இந்தத் தெய்வ சோதனையில் இருந்து இவர் சங்கீத சாதனையாலேயே வெளி வந்தார் என்று கூறுதல் வேண்டும். "துன்பம் இல்லாத இன்பமே தூயர் சங்கீதமே" "சங்கடமே ஜகம் சஞ்சலமே ஜகம் சங்கீதமே சுகம்" "என்ன செய்தாலும் உன்னை விடுவேனோ" என்ற பாடல்கள் இச்சந்தர்ப்பத்தில் பாடப் பெற்றன.

உத்தியோக தோரணையில் இவர் ஆசிரியர் அல்லர், எனினும் வாழ்வு முறையால் உபாத்தியாயர். பயின்ற கலையைப் பிறருக்குப் பயன்படப் பரிந்தளிக்கும் பண்புடையவர். இவரிடம் இசைக் கலை பயின்ற மாணவர் மாணவியர் பலர். இன்னவர்க்கு இவர் நாடோறும் இசை பயிற்றும் தொழிலைத் தமது பற்றுட்டுக் கலையாக (Hobby) மேற்கொண்டிருந்தார். வீணையை வாசித்தே இசையை ஓதுவர். இவர் தம் அருங்குணங்களுள் பிறர் குறை உரையாப் பெருமையும் யார்யாருக்கும் தாழ்ச்சி சொலும் அருமையும் குறிப்பிடத்தக்கனவாம். அயலவர் குற்றங்களை இவர் அயர்ந்தும் வெளியிட்டார், அற்றம் மறைக்கும் பெருமை என்ற வள்ளுவர் வாசகத்திற்கு இலக்கியமாக இவர் தம் வாழ்வு அமைந்திருந்தது. செல்வக் குடியிற்றோன்றிய இச் சீலர், பெரிய உத்தியோகம் வகித்த இச் சீமான், ஏழை எளியவர்களிடத்தும் மிகவும் பணிவாகவே பேசுவார். இதை இவரது உறவினரிற் சிலர் விரும்பாது இவரைக் கடிந்ததுமுண்டு. அந்த வேளைகளிலும் இவர் பாய்ந்து வரும் புலிக்கெதிரேயுள்ள பூனைபோல அடங்கி, மில்டன் அப்படிச் சொல்லியிருக்கிறார்; ஷேக்ஸ்பியர் இப்படிக் கஷ்டங்கள் அநுபவித்திருக்கிறார் என்று மேற்கோள் காட்டிப் பேசுவது சுவாரஸ்யமாக இருக்கும். இன்னும்

அதிகமாக சத்தம்போட்டுப் பேசினால் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாதே என்று சாவதானமாகச் சொல்லி நகைச் சுவை கலந்து சாந்தி செய்வார்.

இவர் நூல்கள் எழுதியும் தமிழுக்கு நிலையான அரும் பணியாற்றி இருக்கிறார். சாபக்ளீஸ் கிரேக்க நாடகத்தின் மொழி பெயர்ப்பாக லீல நாடகமும் ஷேக்ஸ்பியரின் சிம்ப லைன் மொழி பெயர்ப்பாக சத்தியவதியும் இவரால் தோற்று விக்கப் பெற்றன. இரவி வர்மன் என்ற வரலாற்றுத்துறை நாடகம் இவராலேயே இயற்றப்பெற்று மதுரைத் தமிழ் சங்கத்தில் அரங்கேற்றப் பெற்றது.

இவர்தம் செய்யுள் திறம் உணர்ந்த தமிழறிஞர் அருள் திரு பாப்புலி இவரைக் கவிஞர் இரவிந்திரநாத் தாகூருடன் ஒப்பிட்டு உரைத்துள்ளார்கள். 1927-ல் சென்னையில் கூடிய தமிழிசை மாநாட்டில் இவரது புலமையைப் பாராட்டி ஒரு பொற்பதக்கம் அளிக்கப்பெற்றது. அங்கே இவர் "தமிழ்த்தியாகையர்" என்ற சிறப்புப் பட்டம் பெற்றார். 1934-ல் திருநெல்வேலியில் கூடிய சென்னை மாகாணத் தமிழர் மாநாட்டில் இவருடைய கீர்த்தனங் களைப் பாராட்டி "இசைத்தமிழ்ச் செல்வர்" என்ற பட்டத்தை அளித்தார்கள்.



# மலரும் மாலையும்

தேவ அன்னையின் மாண்பினை மனதார நினைந்து வாயார வாழ்த்தி அவளது திருவடிகளுக்குப் பாமாலை சூடி யவர்களும் பாதமலர் கொண்டு அஞ்சலி செய்தவர்களு மான பைந்தமிழ் பாவாணர் பலர். இவர்கள் அனைவரும் அன்னையிடத்துத் தங்களுக்குள்ள அன்பை நமது உள்ளத் தும் அரும்பச் செய்தவர் ஆவர். இப் பாவலர் அன்னையின்

பெரும் புகழை நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய் தர நாற்கவியில் பாடும் பணியைத் தவங்கிடந்து பெற்ற தகைமையாளர். காப்பியக் கவிஞர்கள் பிரபந்தப் புலவர் கள் இசைவல்லார்கள் கீர்த்தன அறிஞர்கள் எனப் பல திறத்தவரும் அமைத்த கலைப் பூங்காவில் அன்னையின் புகழ் மணக்கும் கவி மலரும் பாமாலையும் கருத்திற்கும் காட்சிக்கும் ஒருசேர விருந்தளிக்கின்றன.

தைரியநாதர் அருளிய தேம்பாவணி ஆரிய வளவன் திருச்சரிதைகூறுதற் கெழுந்ததேயெனினும் திவ்விய தாயின் பெருமையைப் பலப் பல இடங்களில் புலப்படுத் திச் செல்கின்றது. சுவாமிகள் இயற்றிய திருக்காவலூர்க் கலம்பகம் அவர் அமைத்த கற்கோயிலைச் சுற்றிப்படர்ந்த கலைக்கோயில். எம் பெருமான் திருப்பாடுகளைக் கண் ணுற்ற எமதன்னையின் அருந்துயரை அன்னை அழுங்கல் அந்தாதியில் எடுத்துரைக்கின்றார். அடைக்கல நாயகி கலி வெண்பா அடைக்கல மாலை உலா என்ற இரு பிரபந்தங் களும் அன்னைமரி சுவாமிகளுக்கு அடைக்கலம் தந்து ஆதரித்த செய்தியை மிகுந்த நன்றியறிதலோடும் உவகைப் பெருக்கோடும் ஓதுகின்றார்.

**அன்னையிடத்து ஆண்டவன்**

*உலக மூன்றினும் உவமை நீக்கிய*
*விலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்*
*அலகில் மூன்றினும் நடுவ மைந்தனை*
*நிலவு மூன்றினும நிறப்ப வின்றனள்*

(*தேம்பாவணி*)

**நீயலால் துணை ஏது?**

*அன்னையே நீயல்லால் அன்புற்றென் நோயறிந்திங்*
*கென்னையே ஆர்யார் இனிக்காப்பார்—தொன்றேய்*
*பெருக்காவல் தீரப் பெருமருந்தா நீயாள்*
*திருக்காவ லூர்வினையும் தேன்.*

(*திருக்காவலூர்க் கலம்பகம்*)

**எங்ஙனம் ஆற்றுவேன்?**

*எனக்கோர் சிறுவனும் தெய்வமும் நீ இருந் தேந்தருளால்*
*நினக்கோர் பயந்தாள் எனை விட்டிறந்த தன் நின்னையலால்*
*மனக்கோர் உறுதுணை இன்றி உனை இலள் மண்ணிடை*
*[யான்*
*பினர்க்கோர் பொழுதிருப் பேனே என்துயிர்ப் பேருயிரே!*

*(அன்னை அழுங்கல் அந்தாதி)*

**மீனரும் எழிற் சிரத்தி**

*மீனரும் எழிற் சிரத்தி வெண்மதியார் மலர்ப்பதத்தி*
*பானரும் கதிர்ப் படத்தி பாகதியாள் அரும் வரத்தி*
*ஈரறத்தி அருள் திறத்தி இணை அகற்றும் கொடைக்கரத்தி*
*சீரியற்றித் தனைய புரிந்தாள் திருக்காவலூர் வயத்தி*
*அவ்வுலகே நின்றிறையோன் அணுகி நமை அமைந்தளிப்ப*
*இவ்வுலகில் ஒரு மகவா இணை துணை முற்றில் துயிர்த்தி*
*வானவரே பணிகேட்ப வானவர்கோன் மடியுறங்க*
*ஈனவரே பணிந்திரப்ப எவ்வுயிர்க்கும் அடைக்கலத்தி*
*இன்பருளிப பூமிழல் சூழ் இயை காவல் ஊரகத்தே*
*அன்பருளி நீ எனையும் அடைக்கலங்கொண்டாயலையோ?*

*(அடைக்கல நாயகி கலி வெண்பா*

கிருஷ்ண பிள்ளை இயற்றிய இரட்சண்ய யாத்திரிகத்தில் அன்னைமரியைப் பாராட்டும் இடம் கருதிக் காணுதற் குரியதாம். இயேசு பெருமான் சிலுவை சுமந்து செல்வது கண்ட மடவார்கள், வாய்விட்டழுது வருந்துகின்றார்கள். மரி அன்னையின் மகனுக்கா இக் கதி வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டே கண்ணீர் வடிக்கின்றார்கள், எப்படிப் பட்ட அன்னை; மாதருக்குள் ஆசி பெற்ற மங்கலையாம் அன்னை; அருள் நிறைந்த மரியம்மை.

*மாதருக்குள் ஆசிபெற்ற மங்கலையாம் அன்னைமரி*
*காதலனுக்கோவிக் கதி நேர்ந்ததென்று மன*
*வேதனைப்பட்டாற்றுது மெல்லியலார் தாங்குழுமி*
*வீதி இருமருங்கும் மொய்த்தார் வாய் விட்டழுது.*

இயேசுநாத சுவாமியின் பாலத்தியானம் பாடிய அந்தோனிக்குட்டி அண்ணாவியார் ஒவ்வொரு பாடலின் ஈற்றிலும் அன்னை மரிக்கும் அமல நாதனுக்கும் உள்ள தாய் சேய்த் தொடர்பு நலங் காட்டியே பாடியுள்ளார். இவ் வண்ணமே விண்ணகம் பரவும் பெண்ணினுக்கரசியைப் பல வண்ணத் தொடர் கொண்டு தன்மேற் குற்றம் சுமத்தல் என்ற பகுதியில் பரவுகின்றார். மோட்ச பிரதாபியை தெய்வீக கன்னியைக் குறித்த பாடல்கள், ஆராதனைப் பிர காசத்தில் அமைந்த இறுதி இரண்டு பாடல்கள், ஆனந்த மஞ்சரி முழுமையும் அன்னையை உள்ளத் திரையில் அழ கொழுக எழுதிப் பார்த்து எண்ணி எண்ணி மகிழ்ந்துரைக் கும் நினைவு மஞ்சரி தேவமாதாவின் மீது கொச்சகக் கலிப்பா கொஞ்சுதமிழில் கோக்கப் பெற்றது.

*இம்மா நிலத்தில் எனக்கெத்தனை பேர் தாமிருந்தும்*
*சும்மா வல்லது துணையுனைப்போல் காணேனே*
*பம்மா விருளில் பனிப்பகையைத் தானுடுத்த*
*அம்மா என் அம்மா என் அன்னைமரி மாதாவே*

தேவதாயைப் புகழ்வதில் அவருக்கு எத்துணை ஆர்வம்! அண்ணாவியாருடன் பாடி மகிழ்வோம்; பயன பெறுவோம்.

*மற்று நிகரொவ்வா மறைப்பொருளை வையகத்தில்*
*பெற்ற திருத் தாயான பேரின்ப ராக்கினியை*
*உத்தமியைப் பேரின்ப ஓவியத்தை மெய்ஞ்ஞானச்*
*சித்திரத்தை மேலோகர் தேடுந் திரவியத்தை*
*மாதர்க்கரசை மனுக்குலத்தோர் பாக்கியத்தை*
*சோதிக்கிரண நிறை சொர்ணமய வாலயத்தை*
*மேலோகர் வாழ்வை விரத்தர் சிரோமணியை*
*பூலோக மாதவத்தோர் புண்ணியத்தின் பூஷணத்தை*
*நன்மைச் சலதியை நம்பினவர்க்காதரவை*
*தன்மக் கொழுந்து தழைத்துவளர் தண்டலையை*
*ஞானமண நாறு நலர் நந்தாவனத் திரசப்*
*பானப் பசுமை பரிமளிக்கும் செந்தேனை*
*வேதாகமத்தோரும் விண்ணோரும் கொண்டாடு*
*மாதாவை எம்மை வளர்த்தருளும் தாயாரை*

*ஒன்றான கர்த்தர் ஒருவனுடைய சந்நிதியில்*
*மன்றாடி எங்கள் மயக்கம் தவிர்ப்பவர்களைத்*

*தாரித்திரத்தாற் சலிப்பால் அரும் பிணியால்*
*பாரில் துயர் வாரைப் பட்சிகரிப்பவளை*

*எத்துணையுமற்றே இணை இழந்த பாவிகளைச்*
*சத்துவத்தோ டாதரித்துத் தன்னடிமை கொள்*

*தன்பேரில் பக்தி தவறாத பாவிகளை* [பவளை
*அன்போடு தற்காத் தரவணைக்கும் அம்மாளை*

*நம்பியே நாளும் நமக்கிவளே தஞ்சமென,*
*அம்புவியிற் சிந்தித் தனவரதமும் தொழுவோம்.*

வேதநாயகர் யாவர்க்கும் பொதுவான சமரசக் கீர்த்தனை பாடுவதில் வல்லவர் என்ற அளவில்தான் இன்று அறிகின்றோம். அவர் பாடியுள்ள சத்திய வேதப் பாடல்களும் பிரபலமடைய வேண்டும். திருவருள் மாலையும் திருவருள் அந்தாதியும் தேவமாதா அந்தாதியும் பெரிய நாயகி பதிகமும் தனிப் பாடல்களும் நம்மிடை அவருடைய பிற நூற்களை யொத்து உலவுமானால் மரியன்னையைப்பற்றிய இலக்கிய சேவையில் அவரது பங்கு பணியைக கணித்துரைக்கக் கூடும். வேதநாயகரால் புகழப் பெற்றவர் புதுவை வித்வான் சவராயலு நாயகர். சவராயலு நாயகர் மரி அன்னைமீது பாடிக் கொணர்ந்த பாமாலையைக் கண்டு மகிழ்ந்து வேதநாயகர் அவரை வெகுவாய்ப் பாராட்டிய துண்டு. சாற்றுக்கவியின் மூலம் அன்னையின் பெருமையை யும் புதுவை நாயகர் பாடலின் சிறப்பையும் போற்று கின்றார்.

*கலை அழகை உணர் சவராயலுநாய*
*கா, மரிய கன்னித் தாயின்*

*தலை அழகை மின் காட்டும் தாளழகைச்*
*சசிகாட்டும் தங்க மேனி*

*மலை அழகைக் கதிர் காட்டும் குண வழகை*
*மறைகாட்டும் மாண்பால் அத்தாய்*

*நிலையழகைப் பலகவியால் நீ காட்டல்*
*அதிசயமோ நிலத்தில் தானே*

சவராயலு நாயகர் நமதன்னை மீதியற்றிய விருத்தப் பாக்களினும் கீர்த்தனங்களே விஞ்சிய சிறப்புடன் விளங்கு கின்றன. பெர்னதெத்தம்மாள் தான் கண்ட தரிசனத் தைத் தன் தாயிடம் எடுத்துச் சொல்லும் பான்மையில் அமைந்த கண்ணிகள் களிபேரின்பம் பயப்பன.

கும்பகோணம் துரைசாமி முதலியார் அவர்கள் வேத புரி அந்தாதி என்ற மகுடத்தில் கும்பகோணம் வேதபுரி மரியன்னை மீது இனிய பாக்களை இசைத்துள்ளார். சங். சி. ஞானப்பிரகாச சுவாமியவர்களால் பாடப் பெற்றுள்ள கருணைகரி மாலையும் மரியன்னையின் அருள் பாவும் பாமாலையே. மரியம்மன் சதகம் என்ற பெயரில் மரி சவரி தாசன் என்பார் நூறு ஆசிரியம் பாடியுள்ளார். இவர் சென்னை இராயபுரத்தில் வதிந்தவர் என்று தெரிகின்றது. திருச்சிராப்பள்ளி அர்ச். சூசையப்பர் கலாசாலை சங். கேயுஸ் சுவாமிகளின் உத்தரவின்படி தமிழ்ப் பண்டிதர் எம். எஸ். மணியன் பிள்ளையவர்கள் மரியம்மைப் பதிகம் பாடி யுள்ளார்.

இன்ப கவிராயரின் வழித்தோன்றல் மரியான் சவியேர் ஹென்றி லெயோன் மாதா பக்தியில் முதிர்ந்தவர். இவர் உண்ணும் போதும் உறங்கும் போதும் எண்ணும் போதும் எழுதும் போதும் பனிமய அன்னையின் திரு நாமத்தை வாய்விட்டு வணங்காத சமயம் காண்டலரிது என்று அறிந் தோர் கூறுவர். இவர் பாடிய பனிமய ஆத்தாள் பதிகம் தூத்துக்குடிக் கடற்கரைப் பகுதிகளில் வாழும் கத்தோ லிக்கரின் பக்திக் களஞ்சியம். அந்தப் பதிகப் பாமாலையில் ஒரு கவி மலரோடு இந்த உரைமாலை நிறையும்.

*தண்மதி மிதித்து வெம்பாற்கரனை ஆடையாய்த்*
*தரித்துமீன் மௌலி புனையாய்*
*தரணியிலெம் ஆதிஅனை ஏவைபுரி பாதகம்*
*தனைநீவி உலக ழுய்யத்*
*தற்பரன் உனதுதிரு அமலோ தரத்தின்மனு*
*ஜனனமாய் வந் துதிக்கத்*
*தானுன வவனெலாம் உளவாக்கு முனபுளந்*
*தன்னில் தரித்த அமுதே*

விண்மணி விளங்கும் பரிசுமா நகரத்தின்
மேயவோர் துஷ்ட பூதன்
விமலியுனை நிந்திக்க மனவெகுளி சகியா
விடைத்தலோ டவனை வெட்டி
வெம்பழிக் காளான நினதடிமை உயிரைநீ
மீள் சரிதை பொய்யல்லவே
வெய்யகொடு அலகைசெயும் அல்லலுறு நிஷ்டூர
வினையா லெமுள மெலிந்து

கண்மழை சொரிந்து நின் பாதாம் புஜங்களே
கைகண்ட ஆதார மாய்க்
கருதியுனை அணுகினோம் எமதுதுயர் தீர்க்கநின்
கைத்தலத் தேந்து சர்வ
கர்த்தவ்ய சாக்ஷாத் பரம்பொருளை வேண்டிநின்
காருண்ய சித்தம் வைத்தால்
கடிதி லெம் பவவறுமை ஒழியும்இஃ துண்மையே
கைவிடா தருள் செய்வையே

தெண்மழைத் தடமதில் மேதிக ளுழக்கிடச்
சினவாளை தாவி நெடிய
தெங்கினற் கனிகளை உதிர்க்கமுட் புறமார்ந்த
தீங்கனி கழிந்து சிந்தும்
செந்தேறல் மடைபாய்ந்து சாலியை வளர்த்திடும்
சீருலாங் கழனி சூழ்ந்த
திருமந்த்ர நகரிலெழு மருமந்தி ரத்திலுறை
திவ்யபனி மய வன்னையே !



# நசரைக் கலம்பகம்

சங்க காலத்திற்குப் பிற்பட்ட புலவர்கள் கவிதைத் தொகுப்பு முறையினைப் புதிதாக வகுத்துக்கொள்ள, அந்த வகையில் வந்த வளமார்ந்த சிற்றிலக்கிய நூல் வரிசை தொண்ணூற்றாறு. இவைகள் "தொண்ணூற்றாறு வகைச் சிறுபிரபந்தங்கள்" என்று பேசப்படும். இவற்றுள் ஒன்று கலம்பகம். பலவகை வண்ண மலர்களால் ஆன மாலை கதம்பமாலை என்று பெயர் பெறுவதுபோல பலவகை வண்ணப் பாக்களால் ஆக்கப்பெற்ற இச்செய்யுள் மாலையும் கலம்பகம் எனப் பெயர் பெற்றது. கனிந்த கவிகளை அணி அணியாகக் கொண்ட இந்தக் கவி மணிமாலையுள் புயவகுப்பு மதங்க அம்மானை ஊசல் என வருகின்ற பதினெட்டு உறுப்புக்களும் பிறவும் விரவிவரும். வெண்பா கலிப்பா ஆசிரியப்பா கலித்துறை கலித்தாழிசை முதலிய வேறுபடு யாப்பமைதிகளைப் பெற்றுவரும் இத்தொடர் நூல் முற்றிலும் அந்தாதித் தொடையில் தொகுக்கப் பெறும். இன்னின்ன உறுப்பு இன்னின்ன பாவினம் என்ற வரையறை இருப்பது உண்மையாயினும் இதனால் புலவர்களின் உணர்ச்சிப் பெருக்குத் தளைக்கப் பெறுவதில்லை. இந்த வரையறை நூலுக்கு ஒரு அமைப்பைக் கொடுக்கின்றது, வனப்பை வழங்குகின்றது. புலமை வெளிப்பாட்டுக்கு வாயிலாகின்றது. பயில்வார்க்கு இசைமையை இனிமையை அள்ளி வார்க்கின்றது. அந்தாதித் தொடை காரணமாக கலம்பகமாலையை வாய்முறையாக ஓதி உளத்தில் இருத்தும் நலம் பெறுகின்றோம்.

அழகர் கலம்பகம் கச்சிக்கலம்பகம் திருவரங்கக் கலம்பகம் திருவேங்கடக் கலம்பகம் நந்திக்கலம்பகம் மதுரைக் கலம்பகம் முதலியன கலம்பகத்துறையில் பிரசித்தி பெற்றவை. கிறிஸ்தவ சமயப் புலவர்களும் நாடும் பொருட் சுவை சொற்சுவை தோய்ந்த நல்ல கலம்பகங்களைத் திறம் படயாத்துத் தந்துள்ளனர். நம்மவர் அறிந்தவையும் நம் தமிழகம் அறிய வேண்டியவையுமாகிய கலம்பகங்களுள் முக்கியமானவை மூன்று. அவை திருக்காவலூர்க் கலம்பகம் எண்ணூர்க் கலம்பகம் நசரைக் கலம்பகம். இம்